# கல்கி

KALKI 29.1.89 ரூ. 2.




## கடத்தலைத் தடுக்கும் காவற்படை...

# நாளை மனிதன்

இந்தக் கதை இரண்டாயிரமாவது வருஷத்துக்கப்புறம் ஏதோ ஒருநாள் நடக்கப் போவதாய் — அப்படியொரு தீர்க்க தரிசனம், எழவு! — எடுக்கப்பட்டிருக்கிறது.

பயங்கரம்டா சாமி! ஆரம்ப கால ஃப்ராங்கன்ஸ்டீனை அடித்தளமாய்க் கொண்டு 'கொலை கொலையாய் முந்திரிக்காய்' என்று பூச்சாண்டி காட்டியிருக்கிறார்கள் பாருங்கள். பார்வையாளர்களிடமிருந்து 'ஊய் ஊய்' என்று பல வினோதமான ஓசைகளையெல்லாம் எழுப்புகிறது.

ஒரே ஒரு மருத்துவ ஆராய்ச்சிக் கூடத்திலே ஜெய் சங்கர், ஜெய் கணேஷ் — இன்னொரு ஜெய்(!) புதுமுகம் டாக்டர்கள். என்னமோ 'மனிதனென்பவன் தெய்வமாகலாம்' என்று ஓயாத ரகசிய ஆராய்ச்சியில் ஈடுபட்டிருக்கிறார்கள்.

தலைமை டாக்டர் ஜெய்சங்கருக்கு மகத்தான வெற்றி! ஆஜானுபாகுவான பிரேதம் ஒன்றினுள் விதவிதமாய் இஞ்செக்ஷன் போட்டு அதன் விழி திறக்கச் செய்து எழ வைத்துப் பேசவும் வைத்து விடுகிறார்! அது திருவாய் மலர்ந்து, 'செத்துப் போன எனக்கு உயிர் கொடுத்துட்டீங்க டாக்டர். நீங்க என் தெய்வம்', என்று கூடச் சொல்கிறது. அப்புறமாய் அது தடுமாறி விழப் போக, அதற்கு மேல் ஏதோ சரி பண்ண வேண்டும் என்று இன்னொரு இஞ்செக்ஷனைப் போட்டுத் தொலைத்து விட்டு மூன்று டாக்டரும் இந்தண்டை வெளியே வர, அந்தண்டை அது கண் முழித்து வெளியேறித் தனது கொலைப் பயணத்தைத் தொடக்கி விடுகிறது!

அந்த நடை அந்த உதட்டிறுக்கம், அந்த ஆகிருதி — முடிந்த அளவுக்கு போரிஸ் கார்லாஃப் நகல்தான் — தயாரிப்பாளர் தக்காளி சீனுவாசனுக்கு பயங்கரமாய்ப் பொருந்தியிருக்கிறது. இவர்தான் நாளை மனிதன்.

நாளை மனிதனின் முக்கியக் கடமை பெருகி வரும் ஜனநெரிசலைக் கணிசமாய்க் குறைக்க வேண்டியதுதான் என்பதை நாசூக்காய்ச் சுட்டிக் காட்டுகிறார்களோ? அதற்காக இத்தனை கோரமாய், குரூரமாய், துடிக்கத் துடிக்கக் கண்ணில் படுகிற வரையெல்லாம் வேட்டையாடித் தீர்த்துக் கட்ட வேண்டுமா?

இதிலே இன்ஸ்பெக்டர் பிரபுவும் அவரது காதலி ப்ளஸ் அமலாவும் எப்படிப் போய் மாட்டினார்கள்? அவர்களது காதல் சஞ்சாரங்களை, நாளை மனிதனை மறந்து கொஞ்ச நேரத்துக்கு ரசித்து விட்டு 'அப்பாடா' என்று நெஞ்சை நீவி விட்டுக் கொள்கிறோம்.

அமலாவின் தோழியாய் வரும் ஜெயஸ்ரீ ஆசையோடு படுக்கையறைச் சந்திப்புக்கு ஏற்பாடு செய்திருக்கும் வேளையில் கணவன் கொலையுண்டிருக்கக் கண்டு பயந்து நடுங்கி உடல் வியர்க்கக் கொலையாளியிடமிருந்து தப்பிக்க ஓடி ஒளிந்து நடுங்கும் இடத்தில் பூரண அனுதாபத்தைப் பெறுகிறார்.

இறுதிக் காட்சியில் பிரபு தந்திரமாய் அதை மட்டும் ஓடுகிற காரில் விட்டு விட்டுக் காதலியுடன் வெளியே குதிக்க, சீறிப் பாயும் கார் பாறையில் மோதி நொறுங்கி வெடித்து எரிய அதன் நடுவிலிருந்து எரிந்து கொண்டே அது எழுந்து வந்து அடுத்திருந்த தண்ணீர்க் குட்டையில் மூழ்கி அணைந்த கரியாய் மேலேறி வந்து பிரபுவின் மேல் தெம்பு குறையாமல் பாய — பிரபு ஒரு வழியாய்ச் சமாளித்து அந்த நாளை மனிதனை ஒரு பாழுங் கிணற்றுக்குள் தள்ளித் தப்பித்து விட்டார் என்று பார்த்தால் — நாம் தப்பிக்க முடியாது போலிருக்கிறதே! 'எதிர்பாருங்கள் நாளை மனிதன் இரண்டாம் பாகம்' என்று கடைசியாய் ஓர் அறிவிப்பு.

பார்த்த வரைக்கும் போதும். விட்டு விடுங்கள் ப்ளீஸ்.

— பி. எஸ். எஸ்.

# "கடத்தலைத் தடுப்போம்; கஷ்டத்தில் உதவுவோம்!"



* மீனவப் படகுக்கு உதவிக்கரம்...

ஏதாவது அபாயம் நேரிடுகிற போது, பிறரின் உதவியை நாடி, மனிதர்களால் குரல் கொடுக்க முடியும். ஏன், விலங்குகளால் கூட முடியும். ஆனால், கடலுக்குள் வாழும் ஆமைகள் தங்களுடைய ஆபத்தான நிலைமைக்காக யாருக்கு அபயக் குரல் கொடுக்க முடியும்? அப்படியே குரல் கொடுத்தாலும் அது யாருடைய காதுகளுக்குக் கேட்கப் போகிறது?

'ஏன் கேட்காது?' ஆலிவர் ரிட்லி கடல் ஆமைகள்' (**Oliver Ridely Sea Turtles**) என்ற அபூர்வ வகைக் கடல் ஆமைகளின் அபயக் குரல்களை எங்கள் காதுகள் மிகத் துல்லியமாகக் கேட்டிருக்கின்றன. நாங்களும் உடனே ஓடோடிச் சென்று அபயக்கரம் கொடுத்து ஆபத்தைக் களைந்திருக்கிறோம்' என்கிறார்கள் இந்தியக் கடலோரக் காவற்படையினர்!

எப்படி?

பசிபிக் பெருங்கடலில் வாழும் ஆலிவர் ரிட்லி என்ற அந்த அபூர்வக் கடல் ஆமைகள், ஆண்டுதோறும் நவம்பர், டிசம்பர் மாதங்களில் தங்கள் இனப்பெருக்கத்திற்காக இந்தியக் கடலோரப் பகுதிகளுக்கு வருகின்றன. சூல் கொண்ட பெண் ஆமைகள் கடற்கரைக்குச் சென்று மணலில் வளை தோண்டித் தங்கள் முட்டைகளை இடுகின்றன.

இவற்றைக் கவனித்த சிலர், அந்த முட்டைகளை வியாபாரத்திற்குப் பயன்படுத்திக் கொள்வதில் ஈடுபட்டனர். சாதா



* மீன்பிடிப் படகா? கடத்தல் படகா?: திடீர்ச் சோதனை.



* உதவிக்குத் தயாரால் காவற்படை வீரர்...



காவற்படைக் கப்பல்: எதிரிகளை எச்சரிக்கவும் பீரங்கி தயாராய் இருக்கிறது...

ரணக் காலங்களை விடச் சூல் கொண்ட காலத்தில் பெண் ஆமைகளின் நடமாட்டம் ஆபத்துக் காலங்களில் தப்பியோட முடியாதபடி மெதுவாகத்தான் இருக்கும் என்பதால், அந்த பலவீனத்தைப் பயன்படுத்தி, அவற்றைச் சுலபமாகப் பிடிக்கவும் செய்தனர். இதன் காரணமாக அந்த அபூர்வ வகை ஆமைகளின் எண்ணிக்கை அரிதாகி, இயற்கைச் சமநிலையை பாதிக்கும் அபாயத்திற்கு வந்து விட்டது. இதையறிந்த வனத்துறையினர் அந்த ஆமைகளைக் காப்பாற்ற இந்தியக் கடலோரக் காவற் படையின் உதவியை நாடினர். இவர்களும் மகிழ்ச்சியோடு உதவிக்கரம் நீட்டினர். ஆமைகள் இப்போது அபாயமின்றிக் குடும்பம் நடத்துகின்றன!

'ஆம்! எங்களுடைய வெற்றி என்பது, எந்த உயிரையும் கொல்வதில் இல்லை; காப்பாற்றுவதில்தான் இருக்கிறது' என்கிறார்கள் கடலோரக் காவற்படையினர். உண்மை! 'தனியாய் வருபவர் துணிவைத் தவிர துணையாய் வருபவர் யாரோ...' என்ற பாதுகாப்பற்ற நிலையில் மீன் பிடிக்கச் செல்லும் மீனவர்கள், திசை மாறிச் சென்று ஆபத்தில் சிக்கிக் கொள்ளும் போதும் ஓடோடிச் சென்று அபயக்கரம் நீட்டுவதும் இவர்கள்தாம்! அதே போலப் பயணக் கப்பல்களிலும் வணிகக் கப்பல்களிலும் செல்லுபவர்தள் தங்களின் ஆபத்தை ரேடியோ அலைவரிசையில் அறிவித்து உதவிகோரும் போதும் அவற்றைக் கேட்டு மின்னல் வேகத்தில் சென்று உதவுபவர்களும் இவர்கள்தாம்!

இவை மட்டும்தான் என்பதில்லை. இந்தியக் கடலோரக் காவற்படை' (**Coast Guard**) என்று எழுதப்பட்ட வெள்ளைக் கப்பல்கள் நமது கிழக்கு – மேற்குக் கடற் பகுதிகளில் ரோந்து வந்து கொண்டே இருக்கும் போது, அபயக் குரல் கொடுப்போருக்கு உதவிக்கரம் நீட்டுவதோடு, அத்து மீறி நுழையும் அந்நியர்களையும் எச்சரிக்கை செய்து தக்க நடவடிக்கை எடுக்கின்றன. மற்ற கப்பல்கள் தங்களிடமுள்ள கழிவுப் பொருள்களைக் கடல் நீர் மாசடையுமாறு வெளியேற்றினால் அவற்றையும் தடுத்து நிறுத்துகின்றன. மிக மிக முக்கியமாகக் கடத்தல் செய்யும் பேர்வழிகளைக் கண்காணித்துக் கண்டுபிடித்து, நமது சுங்கத் துறைக்கு ரொம்பவும் உதவியாக இருக்கின்றன.

ஒருமுறை அப்படித்தான் ஆந்திரக் கடற்கரையைத் தாண்டி ஓரிடத்தில் ஒரு படகில் கடத்தல் பொருள்களோடு கடத்தல்காரர்கள் சென்று கொண்டிருந்தனர். அவர்கள் சென்று கொண்டிருந்தது ஆழமில்லாத கடற் பகுதி என்பதால் கடலோரக் காவற் படையினருடைய கப்பல் அவர்களைத் துரத்திச் சென்று பிடிப்பது சாத்தியமில்லை. என்ன செய்வதென்றே தெரியாத ஒரு நிலை. திடீரென்று ஒரு யோசனை. உள்ளூர் மீனவப் படகைப் பிடித்துக் கொண்டு அவர்களைத் துரத்தினால் என்ன? அதன்படியே துரத்தினார்கள். தங்களைத் தொடர்ந்து வருவது சாதாரண மீனவப் படகுதான் என்பதால் கடத்தல்காரர்களும் இவர்களிடமிருந்து தப்பிச் செல்ல முயற்சியில்லாமல் சென்றார்கள். இவர்கள் அருகில் சென்ற போதுதான் கடத்தல்காரர்களுக்கு விஷயம் தெரிந்திருக்கிறது. உடனே தப்பும் நோக்கில் ஆழமான கடற் பகுதிக்குள் தங்கள் படகைச் செலுத்திய கடத்தல்

காரர்கள் அங்கே தயாராக இருந்த காவற் படைக் கப்பலால் பிடிபட்டு விட்டார்கள். அவர்களிடமிருந்து சுமார் ஐம்பது லட்சம் மதிப்புள்ள கடத்தல் பொருள்கள் பிடிபட்டன. கூடவே அதிலிருந்த நான்கு பாகிஸ்தானிய உளவாளிகளும் பிடிபட்டனர்!

முன்பு இப்படிப்பட்ட பணிகளை யெல்லாம் இந்தியக் கப்பற்படைதான் செய்து கொண்டிருந்தது. பிறகு பல்வேறு காரணங்களால் இந்தியக் கப்பற்படையின் பணிச்சுமை அதிகரிக்கவே இப்படிப்பட்ட பணிகளுக்காகக் கடந்த 77 — ஆம் ஆண்டு பிப்ரவரி மாதம் முதல் தேதி 'இந்தியக் கடலோரக் காவற்படை' என்ற தனி அமைப்பு உருவாக்கப்பட்டது. இது ஒரு தனி அமைப்பு என்றாலும் இதுவும் கப்பற்படையைப் போல் நேரடியாகப் பாதுகாப்புத் துறையின் கீழ் இயங்கும் ஒரு சுதந்திர அமைப்பே. கப்பற்படைக்கும் இதற்கும் இடையிலுள்ள ஒரேயொரு வித்தியாசம், கப்பற்படை போர்க் காலங்களில் மட்டுமே களத்துக்கு வருகிறது. கடலோரக் காவற்படையோ, சமாதானக் காலங்களிலும் முழுமூச்சோடு செயல்படுகிறது. இதன் லட்சிய வாசகமே, 'குரல் கொடுங்கள்: காப்பாற்ற நாங்கள் இருக்கிறோம்' என்பதுதான்.

கடலோரக் காவலர்கள் — 2

# தளபதியுடன் ஒரு பேட்டி



இந்தியக் கடலோரக் காவற்படை (கிழக்கு) யின் டெபுடி இன்ஸ்பெக்டர் ஜெனரலும் கமாண்டருமான டி. ஹெச். ஆர். அய்யருடன் ஒரு பேட்டி......

"மீன்பிடிக்கச் செல்லும் மீனவர்கள் வியாபாரக் கப்பல்களிலும், பயணக் கப்பல்களிலும் செல்பவர்கள் ஆகியோருக்குக் கடலுக்குள் ஆபத்து நேரிடும் போது, 'வயம் ரக்ஷம்' (நாங்கள் காப்பாற்றுகிறோம்) என்று சொல்கிறீர்கள். ஆனால் இப்படிப்பட்ட கடலோரக் காவற்படையினரான உங்களுக்கே எதிர்பாராத வகையில் ஏதாவது ஆபத்து நேர்ந்தால் உங்களை யார் வந்து காப்பாற்றுவார்கள்? அப்படிப்பட்ட அனுபவம் ஏதாவது ஏற்பட்டிருக்கிறதா?''

''கடலுக்குள்ளிருந்து அபயக் குரல் கொடுப்பவர்களைக் காப்பாற்றச் செல்லும் எங்களுக்கும் ஆபத்துகள் நேரிடலாம். அதை எதிர்பார்த்துத்தான் செல்லுகிறோம். அப்படி ஏற்படுகிற போது கரையிலிருக்கும் எங்கள் சகாக்களைத்தான் நாங்கள் கூப்பிடுவோம். நல்லவேளையாக அப்படியொரு நிலைமை எங்களுக்கு இதுவரை ஏற்பட்டதில்லை!'' (சிரிக்கிறார்)

''கடலுக்குள் ஏற்படும் மாசுகளை எப்படிக் கட்டுப்படுத்துகிறீர்கள்?''

''உதாரணத்திற்கு, ஏதாவதொரு கப்பலிலிருந்து வீணான எண்ணெய் கடலுக்குள் வடிந்து கொண்டேயிருந்தால், அந்த எண்ணெயின் தன்மையைப் பொறுத்துக் கடல் மாசுபட வாய்ப்புண்டு. எனவே, அப்படிப்பட்ட கப்பல்களை நாங்கள் கண்டுபிடித்து, அவர்களைக் கொண்டே அதைத் தூய்மைப்படுத்தச் சொல்கிறோம். அவர்கள் மறுக்கிற போது அவர்கள்மேல் வழக்குத் தொடருவோம்.''

''அந்த எண்ணெய் அந்தக் கப்பலிலிருந்துதான் வெளியானது என்பதை எப்படி நிரூபிப்பீர்கள்?''

''கப்பலின் தன்மை, எண்ணெயின் தன்மை இவற்றைக் கொண்டு, இரசாயனப் பரிசோதனைகள் செய்து கண்டுபிடித்து நிரூபிப்போம்.''

''நீங்களாகவே எந்த இடத்தையும் சுத்தப்படுத்த மாட்டீர்களா?''

''பொதுவாக மாசுபடக் காரணமானவர்கள்தான் அதைத் தூய்மைப்படுத்தும் பொறுப்பையும் ஏற்றுக் கொள்ளச் செய்வோம். ஆனால், கோவளம் கடற்கரை போன்ற சுற்றுலா இடங்களிலுள்ள கடல் நீரில் மாசு ஏற்படும் போது — எண்ணெய்கள் ஏதாவது மிதக்கும் போது, 'டி-சி-3' போன்ற தெளிப்பானைக் கொண்டு சுத்தம் செய்கிறோம். மற்றபடி மாசுக்குக் காரணமாகிறவர்கள்தான் அதைச் சுத்தப்படுத்த வேண்டும்.''

''மீனவப் படகுகளையோ அல்லது கப்பல்களையோ, அபாயத்திலிருந்து காப்பாற்றிய சம்பவம் ஒன்றைச் சொல்ல முடியுமா?''

''நிறையச் சொல்லலாம். உதாரணத்திற்கு ஒன்று: சிங்கப்பூருக்குச் சொந்தமான வணிகக் கப்பலொன்று, கல்கத்தாவுக்கும் பங்களாதேஷுக்கும் இடையில் சென்று கொண்டிருந்த போது — கடந்த ஆண்டு நவம்பர் மாதம் 29 — ஆம் தேதி புயலில் சிக்கிக் கொண்டது. கப்பலுக்குள்ளும் தண்ணீர் புக ஆரம்பித்துவிட்டது. அந்த நிலையில் அவர்கள் கப்பலிலிருந்து SOS (Save Our Soul) சமிக்ஞைகளை அனுப்ப ஆரம்பித்துவிட்டார்கள். அந்த சமிக்ஞைகளை எங்கள் ரேடியோ மூலம் அறிந்த நாங்கள், உடனடியாக 'ரமாதேவி' என்னும் எங்கள் கப்பலை உதவிக்கு அனுப்பினோம். அந்தக் கப்பல் முழுகி விட்டதால் கப்பலை அடையாளம் கண்டுபிடிக்க முடியாமல் தீவிரமாகத் தேடிக் கொண்டிருந்தோம். கூடவே, எங்களது விமானங்களையும் தேடும் பணியில் ஈடுபடுத்தினோம். அப்போது, மூழ்கிய கப்பலிலிருந்த இருவர் மிதக்கும் கட்டைகளைப் பிடித்துக் கொண்டு உயிருக்குப் போராடிக் கொண்டிருந்ததைக் கண்டுபிடித்தோம். அவர்களைக் காப்பாற்றிய சிறிது நேரத்தில் மேலும் ஆறு பேரைக் கண்டுபிடித்துக் காப்பாற்றினோம். இதேபோல், ஏராளமான முறை மீனவர்களையும் காப்பாற்றியிருக்கிறோம். கப்பலில் உள்ளவர்களுக்கு ஆபத்து




* விமானத்தில் கடல் ரோந்து...




* டி.சி.-3 தெளிப்பான் மூலம் கடல் மாசு சுத்தப் படுத்தப்படுகிறது......

நேரிடும் போது, அவர்கள் அந்த ஆபத்தைத் தங்கள் ரேடியோ மூலம் உடனே வெளிப்படுத்த முடியும். அதைக் கேட்டவுடன் நாங்களும் உடனடியாக உதவிக்குச் செல்ல முடியும். ஆனால், மீனவர்கள் என்ன செய்வார்கள்? அவர்கள் காணாமல் போன வெகு நேரத்திற்குப் பிறகே தரையிலுள்ளவர்கள் எங்களுக்குத் தெரிவிப்பார்கள். அதன் பிறகுதான் நாங்கள் புறப்பட்டுச் செல்ல வேண்டும். அவர்களைத் தேடிக் கண்டுபிடிப்பதும் சிரமமாகவே இருக்கும்.''

''புயலும் மழையுமாக வானிலை மிகவும் மோசமாக இருக்கும் போது, கடலிலிருந்து அபயக்குரல் கேட்டால் நீங்கள் எப்படி அந்தப் புயலைச் சமாளித்துச் செல்வீர்கள்? உங்களுக்கும் அபாயம் இருக்கிறதே?''

''நிச்சயமாக. இருப்பினும் புயலின் வேகத்தைக் கணக்கிலெடுத்துக் கொண்டு அதைச் சமாளிக்கும் திறனுள்ள கப்பல்களில்தான் நாங்கள் செல்வோம். ஆனால் புயலின் வேகம் மிகமிகக் கடுமையாக இருக்கும் போது எங்களாலும் ஒன்றும் செய்ய முடியாது. அதனால்தான், கடலுக்குள் செல்லும் அனைவருக்கும் அன்றாட வானிலை பற்றிய தகவல்களும் எச்சரிக்கைகளும் தரப்படுகின்றன.''

''நீங்கள் சுங்கத்துறைக்கு உதவியாகக்



* காவற்படையால் கண்டுபிடிக்கப்பட்ட கடத்தல் ஜிப்பு மூட்டைகள்...

கடலுக்குள் கடத்தல்காரர்களைப் பிடிக்கும் போது, உங்களின் தற்காப்புக்காகக் கடத்தல்காரர்கள் மீது சில சமயங்களில் துப்பாக்கிப் பிரயோகம் செய்ய நேரிடலாம். அப்போது, 'எங்களின் (கடலோரக் காவற்படையின்) வெற்றி என்பது உயிர்களைக் கொல்வதில் அல்ல: காப்பாற்றுவதில்தான் இருக்கிறது' என்னும் உங்கள் வார்த்தைகள் பொய்யாகிவிடும் வாய்ப்பிருக்கிறதே?''

''நீங்கள் சொல்லுகிற மாதிரி, கடத்தல்காரர்கள் எங்களோடு போரிட மாட்டார்கள். காரணம், நாங்கள் முழுக்க முழுக்க நவீனமான — சக்தி வாய்ந்த ஆயுதங்களோடு இருக்கிறோம் என்பது அவர்களுக்கும் மிக நன்றாகத் தெரியும். இந்நிலையில், அவர்கள் எங்களை எதிர்த்து ஒருபோதும் வெற்றி பெற முடியாதென்பதையும் அவர்கள் உணர்ந்தே இருக்கிறார்கள். எனவே எங்களோடு போரிட மாட்டார்கள். ஒருவேளை அவர்கள் எங்களை எதிர்த்தார்கள் என்றால் நிச்சயமாக எங்கள் ஆயுதங்களைப் பயன்படுத்தத் தயங்கவே மாட்டோம். நல்ல வேளையாக அப்படியொரு இக்கட்டான நிலை வந்து இதுவரை எங்கள் வார்த்தைகளைப் பொய்யாக்கவில்லை! (சிரிக்கிறார்) மேலும் கடத்தல்காரர்களைப் பிடிப்பதென்பது எங்கள் பணியின் ஒரு பகுதிதான். அபயக்குரல் கொடுப்போருக்கு உதவுவதே எங்கள் பணியின் பெரும்பகுதியாகும்.''

''இப்போது உங்களுக்கிருக்கும் சாதனங்கள் உங்கள் பணிக்குப் போதுமானவையாக இருக்கின்றனவா?''

''இந்தியக் கடலோரக் காவற்படை ஆரம்பித்துப் பன்னிரண்டு ஆண்டுகள்தாம் ஆகின்றன. கொஞ்சம் கொஞ்சமாக நாங்கள் பலமடைந்தே வருகிறோம். புதிய சூழ்நிலைகளுக்கு ஏற்ப இன்னும் அதிகமான கப்பல்களும், நவீன விமானங்களும், ஹெலிகாப்டர்களும் தேவைப்படுவதைத் தவிர்க்க முடியாது. எங்கள் தேவைகளுக்கு இந்திய அரசு துரிதமாக உதவி வருகிறது.''

''கடலோரக் காவற்படையில் உள்ளவர்கள் இந்தியக் கடற்படையில்தான் பயிற்சி பெறுகிறார்கள். ஆக, கடுமையான போர்ப் பயிற்சிகளைப் பெற்ற பிறகு, இப்படி சமாதானப் பணிகளில் ஈடுபடுவதென்பது ஏமாற்றமாக இல்லையா?''

''கடலோரக் காவற்படையினர் முழுக்க முழுக்கக் கப்பற்படையின் பயிற்சிகளையே பெறுகிறார்கள் என்பது தவறு. கப்பற்படையின் அடிப்படைப் பயிற்சி என்பது, தரையிலேயே இருந்து பழக்கப்பட்டவர்களுக்குக் கடலில் கப்பலில் வாழ்ந்தவாறு தங்கள் பணிகளைச் செய்யப் பயிற்சியளிப்பதுதான். அதன் பிறகு கடலோரக் காவற்படையினர் பிரிந்து வந்து காவற்படைக்கான பயிற்சிகளைத் தனியாகப் பெறுகிறார்கள்.''

''இலங்கைப் பிரச்னை விஷயத்திலும், மாலத்தீவுகளுக்கு நமது படை உதவிய விஷயத்திலும் கடலோரக் காவற்படையின் பங்கு என்ன?''

''நாங்கள் தனியான ஓர் அமைப்புத்தான் என்றாலும் போர்க் காலங்களிலும், நெருக்கடியான சமயங்களிலும் நாங்கள் நமது கப்பற்படையின் ஓர் அங்கமாகிவிடுவோம். இலங்கைப் பிரச்னை விஷயத்திலும் அப்படித்தான். நமது கப்பற்படைக்கு உதவினோம். சொல்லப் போனால் நமது கப்பற்படையைப் பயன்படுத்துவது என்று சில காலம் சென்றுதான் அரசு முடிவெடுத்தது. அதற்கு அரசியல் ரீதியான காரணங்கள் இருந்தன. ஆனால் அதற்கு முன்பே நாங்கள் நமது மீனவர்களை இலங்கைக் கடற்படையின் அத்துமீறல்களிலிருந்து மனிதாபிமான நோக்கில் காப்பாற்றினோம். மாலத்தீவுகள் விஷயத்தில் எங்களைத் தயார் நிலையில் இருக்கச் சொன்னார்கள். நாங்களும் தயார் நிலையில் இருந்தோம். மற்றபடி எங்கள் உதவியில்லாமலேயே அப்பிரச்னைக்கு முற்றுப் புள்ளி வைக்கப்பட்டு விட்டது!''

கட்டுரையும், பேட்டியும்: **இளங்கோவன்**

அட்டை வண்ணப்படமும், படங்களும்: **யோகா**

# உங்கள் குடும்ப ஆரோக்கியத்திற்கான டின்

## 1கிலோ சாக்கலேட் காம்ப்ளான்



Complan®

COMPLETE PLANNED FOOD

CHOCOLATE FLAVOUR




FREE!

Collect a ceramic mug with this pack.

இலவசம்!




இரண்டு 500 கிராம் டின்களுக்குப் பதில், வாங்குங்கள் 1 கிலோ சாக்கலேட் காம்ப்ளான் டின், மிச்சமாக்கிடுங்கள் 4 ரூபாய்.

அத்துடன் ஒரு பீங்கான் குவளை இலவசம். உங்கள் குடும்பத்தினருக்கு அன்றாடம் தேவைப்படும் மூலாதார சத்துணவுகள் கொண்டதாகும். காம்ப்ளான்.

**வாங்குங்கள் இன்றே.**

**23**

மூலாதார
சத்துணவுகள்
திட்டமிட்ட விகிதங்களில்

**காம்ப்ளான்®**

GX/58/213 TML

மாணவர்கள் படிக்கப் பள்ளிக்கூடம் அல்லது கல்லூரிக்குப் போகிறார்கள், பார்க்கிறோம்; ஆனால் இந்தக் கல்விக்கூட மாணவர்களோ, தாங்களே பள்ளிக்கூடம் நடத்துகிறார்கள்! இதன் ஆரம்பம் என்ன?

# மாணவர்கள் நடத்தும் கல்விக்கூடம்!

சுதந்திரம்... தறிகெட்டு அலையும் சுதந்திரம். வீட்டில் இருந்தால் கட்டுப்பாடு என்று, வீட்டை விட்டு ஓடி, பிளாட்பாரத்திலேயே வாழ்க்கையை ஓட்டும் பேப்பர் பொறுக்கும் சிறுவர்கள் சென்னை நகரில் மட்டும் சில ஆயிரம் பேர்களாவது இருப்பார்கள். கட்டுப்பாடில்லாமல் வளரும் இவர்களில் பலர், பலவகைக் கெட்ட பழக்கங்களுக்கு ஆளாகி விடுவது சர்வ சகஜம்..

சென்னை, சமூக சேவைப் பள்ளி (மெட்ராஸ் ஸ்கூல் ஆஃப் சோஷியல் ஒர்க்) யின் மாணவர்கள் இந்தப் பேப்பர் பொறுக்கும் சிறுவர்களைச் செம்மைப்படுத்தும் பணியில் ஈடுபட்டுள்ளனர். இந்தப் பணியின் இயக்குனரான ரங்கநாதன், மற்றும் சில மாணவர்களைச் சந்தித்தோம்.

"சென்னை நகரிலேயே இந்த மாதிரி சிறுவர்கள் மிக அதிகமாக வசிக்கும் பகுதி ஓட்டேரி. அங்குதான் பல்கலைக் கழக மானியக் குழுவின் நிதியுதவியுடன் எங்கள் திட்டத்தைச் செயல்படுத்தி வருகிறோம்" என்ற ரங்கநாதன், மேலும் சொன்னார்: "முதலில் இந்தச் சிறுவர்களின் வாழ்க்கை நிலை பற்றி நானும், என் மாணவர்களும் ஓர் ஆய்வினை மேற்கொண்டோம். அதன் முடிவில், பேப்பர் பொறுக்கும் சிறுவர்கள் சுமார் ஐம்பது பேரை அழைத்துக் கொண்டு, கோவளம் போய், அங்கே ஒரு முகாம் நடத்தினோம். அங்கே நாங்கள் அந்தச் சிறுவர்களுக்கு, ஒழுக்கம், பண்பாடு இவற்றைப் பற்றிச் சொல்லித் தரத் திட்டமிட்டிருந்தோம். ஆனால் அந்தச் சிறுவர்கள், எந்தவிதமான கட்டுப்பாட்டிலும் இருக்க விரும்பவில்லை. தம் விருப்பப்படி ஓடினார்கள். 'கடலில் குதித்தார்கள், கண்டபடி இரைச்சலிட்டுக் கொண்டு விளையாடினார்கள். நாங்கள் பொறுமையுடன் கவனித்தோம். பின்னர் மெதுவாக அவர்களுடன் ஒருவித ஸ்நேக பாவத்தை வளர்த்துக் கொண்டு பேசினோம். அவர்களும் மனம் விட்டு உரையாடினார்கள்.

"வேறு ஏதாவது தொழில் கற்றுத் தந்தால், பேப்பர் பொறுக்கும் வேலையை விட்டு விடுவீர்களா?" என்று கேட்ட போது 'என்ன வேலை?' என்றனர்.

'மெக்கானிக் வேலை போல ஏதாவது...?'

'ஒரு நாளைக்கு எத்தனை ரூபாய் சம்பாதிக்கலாம்?'

'பத்து, பன்னிரண்டு ரூபாய்...'




• பேப்பர் பொறுக்கும் சிறுவர்கள்: ஜாலியாய் ஒரு சுற்றுலா.

இப்போதே நாங்கள் ஒரு நாளைக்கு நாற்பது, ஐம்பது வரை சம்பாதிக்கிறோமே! இந்த வேலையை ஏன் விட வேண்டும்?'

''இந்தக் கேள்வி எங்களை யோசிக்க வைத்தது. இந்தச் சிறுவர்களை, பேப்பர் பொறுக்கும் வேலையிலிருந்து திசை திருப்பி வேறு வேலையில் ஈடுபட வைப்பது என்பது இயலாத காரியம் என உணர்ந்தோம். ஆனாலும் இவர்களை நல்ல குடிமகன்களாக்க என்ன வழி என்று யோசித்தோம். ஒரு வழியைக் கண்டுபிடித்தோம். அதுதான் இரவுப் பள்ளி ஆரம்பிப்பது. ஆனால் இதற்கு வரவேற்பு எப்படி இருக்குமோ என்கிற சந்தேகம் இருந்தது. எந்தப் பெரிய காரியமானாலும் சிறிய அளவில்தானே அது ஆரம்பமாகிறது! எனவே துணிச்சலுடன் தொடங்கினோம். முதலில் பதினைந்து பேப்பர் பொறுக்கும் சிறுவர்கள் மட்டுமே வந்தாலும் நாங்கள் மனம் தளரவில்லை. மற்ற கல்லூரிகளின் என். எஸ். எஸ். மாணவர்களையும் உதவிக்கு அழைத்துக் கொண்டோம். பேப்பர் பொறுக்கும் சிறுவர்கள் தவிர, அந்தப் பகுதியில் வசிக்கும் ஏராளமான ஏழைக் குழந்தைகளும், இரவுப் பள்ளிக்கு வர ஆரம்பித்தது. எங்களுக்கு உற்சாகம் அளித்தது. மாணவர்களின் எண்ணிக்கை நூற்றைம்பதாக உயர்ந்தது. கணக்கு, அறிவியல், ஆங்கிலம் எனப் பல பாடங்களும் சொல்லிக் கொடுத்தோம்.

''இரவுப் பள்ளிக்கு ஒழுங்காய் வரும் மாணவர்களைப் பிக்னிக் அழைத்துப் போவதாய்ச் சொல்லி, அதன்படி அவர்களைச் சென்னை நகரிலேயே சிறுவர் பூங்கா, பீச் என்று ஒரு மினி சுற்றுலா கூட்டிக் கொண்டு போனோம். இது அவர்களை மிகவும் கவர்ந்தது. அதே போல பழைய துணிமணிகளைத் திரட்டி, வகுப்புக்கு மட்டம் போடாமல் இருக்கிறவர்களுக்கு மட்டும் வழங்கினோம். இதுவும் நல்லதொரு தூண்டுகோலாக அமைந்தது.

'''இப்போது, பேப்பர் பொறுக்கி வாழ்க்கையை ஓட்டிக் கொண்டிருக்கிறீர்கள். நீங்கள் பெரியவரானதும், இதே வேலையைத் தொடர்ந்து செய்வீர்களா? உங்களுக்குக் கல்யாணமாகி, பையன் பிறந்தால் அவன், 'என் அப்பா தெருவில் பேப்பர் பொறுக்குபவர்' என்று சொன்னால் நன்றாக இருக்குமா? இதை யோசியுங்கள்' என்று சொன்னோம். இது நல்ல பலனளித்தது. படிப்பு தவிர வேறு ஏதேனும் ஒரு தொழிலும் கற்றுக் கொள்ள முன் வந்தார்கள். அவர்களுக்குத் தொழிற் பயிற்சியளிக்கச் சமூக சேவை அமைப்புகளின் உதவியை நாடி அதில் வெற்றி பெற்றோம். இந்த வருடம் அவர்களுக்கென மருத்துவ முகாம்; விளையாட்டுப் போட்டிகள் எல்லாம் நடத்தினோம். மருத்துவ மையம் ஒன்றும் எங்கள் முயற்சியால் அவர்கள் வசிக்கும் பகுதியில் திறக்கப்பட்டுள்ளது'' என்று நியாயமான பெருமிதத்துடன் கூறி முடித்தார் ரங்கநாதன்.

— எஸ். சந்திரமௌலி.



# ஆட்சி மாற்றத்தின் போது அண்ணா

○○ அண்ணா முதலமைச்சரான சில நாட்களுக்கெல்லாம் முன்னாள் முதல்வர் பக்தவத்சலனார் இல்லத்திலிருந்து ஒரு டெலிபோன் வந்தது. அவர் முதலமைச்சராக இருந்த போது, சர்க்காரால் போடப்பட்ட சோபா, மேசை, நாற்காலிகளையெல்லாம் எடுத்துக் கொண்டு போவதற்கு லாரி வந்து நிற்பதாகவும், அவைகள் கொஞ்ச நாளைக்கு இருக்கட்டும் என்று பெரியவர் கேட்டதாகவும் சொன்னார்கள். இத்தகவல் அண்ணா அவர்களை உலுக்கியது. 'எடுக்க வேண்டாம்' எனச் சொக்கலிங்கத்தைக் கூப்பிட்டு உத்தரவிட்டது மட்டுமல்ல, தம் வீட்டில் அரசாங்கத்தின் சார்பில் அழகானவைகள் எதுவும் வரக் கூடாது என்றும் சொல்லி விட்டார்.

○○ பழைய காங்கிரஸ் மந்திரிகள் மீது ஒரு விசாரணைக் கமிஷன் போட வேண்டும் என்று சுதந்திராக் கட்சியில் அப்போதிருந்த தோழர் ஹண்டே போன்றவர்களிடமிருந்து கோரிக்கை வந்தபோது, "அவர்களைத்தான் மக்களே தண்டித்து விட்டார்களே! அப்புறம் ஏன் விசாரணை?" என்று பெருந்தன்மையோடு நிராகரித்து விட்டார் அண்ணா.

○○ இந்தி எதிர்ப்புக் கிளர்ச்சியின் போது ஆத்திரமடைந்த மாணவர்கள் சென்ட்ரல் ரயில்வே ஸ்டேஷனுக்கு வந்து கொண்டிருந்த ஒரு ரயிலில் ஒரு பெட்டிக்குத் தீவைத்து விட்டார்கள். "துப்பாக்கிச் சூடு நடத்தி மாணவர்களைக் கலையச் செய்ய வேண்டும், சி. எம். என்ன சொல்கிறார்?" என்று கருத்துக் கேட்டு அவசர டெலிபோன் வந்தது.

"ஒரு பெட்டி எரிந்தால் இன்னொன்று செய்து கொள்ளலாம். ஒருவன் செத்தால் அவனை மறுபடி செய்ய முடியாது" என்று கடுமையாகச் சொல்லி விட்டார் அண்ணா. துப்பாக்கிப் பிரயோகம் செய்வதை அவர் கொஞ்சமும் விரும்பவில்லை.

○○ போலீசார் மருத்துவக் கல்லூரி மாணவர் விடுதிக்குள்ளும் போய் மாணவர்களைத் தாக்கினார்கள் என்றதும் மிகவும் நொந்து கொண்டார் முதலமைச்சர். அடிபட்டோரை நேரில் பார்த்து ஆறுதல் சொல்லத் துடித்தார். சில நாட்கள் சென்றதும் மருத்துவக் கல்லூரியிலேயே மாணவர்கள் கூட்டம் ஒன்று ஏற்பாடு செய்யப்பட்டது. அண்ணா சென்ற போது மாணவர்கள் கூச்சலிட்டார்கள். மாணவர்களின் கோப உணர்ச்சியைப் புரிந்து கொண்ட முதலமைச்சர், "குடிக்கக் கொஞ்சம் தண்ணீர் கொடுங்கள்" என்று கேட்க, மாணவர்கள் அதைக் கூட மறுத்து விட்டார்கள். அதையும் சகித்துக் கொண்டு அவர்கள் மத்தியில் அண்ணா பேசினார். தவறு செய்து விட்ட மனநிலை — தவறு செய்துவிட்ட போலீஸார் மீது குற்றம் சொல்ல முடியாத முதலமைச்சரின் நிலை. ஆயினும் அண்ணா பேசிய பிறகு, புயல் நிரம்பிய அந்தக் கூட்டம் பூங்காவின் நிலையைப் பெற்றது.

○○ அண்ணா முதலமைச்சராகத் தேர்ந்தெடுக்கப்பட்டதும் முன்னாள் முதல்வர் பக்தவத்சலனாரிடம் யாரார் இருந்தார்களோ, பியூன் உள்பட! — ஒருவரையும் மாற்ற விரும்பவில்லை. அப்படியே வைத்துக் கொள்வதாகச் சொல்லி விட்டார். காமராசர் காலத்திலும் பக்தவத்சலனார் முதலமைச்சராக இருந்த போதும் அவர்களுக்கு பிரைவேட் செகரட்டரியாக இருந்தவர் கிருஷ்ணய்யா என்கிற அதிகாரி. திரு. சொக்கலிங்கம் அவர்களைப் பிரைவேட் செகரட்டரியாக நியமிப்பதற்கு முன் என்னைக் கிருஷ்ணய்யாவிடம் அனுப்பி, பிரைவேட் செகரட்டரியாக இருக்க அவருக்கு விருப்பமா என்று கேட்டுவரச் சொன்னார் அண்ணா. கிருஷ்ணய்யா, அண்ணாவின் பரந்த மனப்பான்மையைப் பாராட்டி விட்டு, "ஆனால் அது அவ்வளவு நன்றாக இருக்காது" என்று கருத்துத் தெரிவித்தார். அதன் பின்னர்தான் சொக்கலிங்கத்தை நியமித்தார் அண்ணா.

**"இராம. அரங்கண்ணல் நினைவுகள்" — விலை ரூ. 50.00. வெளியீடு: நக்கீரன் பதிப்பகம், 90, அப்பர்சாமி கோயில் தெரு, மயிலை, சென்னை — 600 004.**

தொகுப்பு: **சுப்ர. பாலன்.**




# கல்கி

1989 ஜனவரி 29
மலர் 47 இதழ் 26
விபவ தை 16




## வென்றவர் அடக்கம் பெறட்டும்; தோற்றவர் ஊக்கம் பெறட்டும்!

"எங்களுக்கு ஆதரவு அளித்தவர்களுக்கு மட்டுமின்றி எங்களை எதிர்த்தவர்களின் நலனுக்காகவும்தான் ஆட்சியில் அமர்கிறோம் என்பதை மறக்காமல் செயல்படுவோம்" என்று தமிழகத்தின் புதிய முதல்வர் கூறியிருப்பது மிகுந்த மனநிறைவைத் தருகிறது. ஜனநாயக ரீதியில் சரியான அணுகுமுறை. ஒரு நல்ல ஆரம்பம். "முடங்கிக் கிடக்கும் தொழில் துறையை வளம் காணச் செய்வதும் வேலை வாய்ப்புக்களைப் பெருக்குவதுமே முதல் வேலை" என்று கலைஞர் கூறியிருப்பதும் சரியான அணுகுமுறை. வாழ்த்துகிறோம். ஆனால் தமிழகத்தின் கஜானா காலியாக இருக்கிறது. ஆளுனரே, பல சமயங்களில் தில்லிக்குக் கப்பரை ஏந்திப் போக நேர்ந்திருக்கிறது. இந்தச் சூழ்நிலையில், கடந்த பல ஆண்டுகளாக நிலவி வருகிற பொருளாதார தொழில் துறைத் தேக்கத்தை எப்படி செப்பனிட்டு முன்னேற்றப் போகிறார் கருணாநிதி என்பதைக் காணத் தமிழகம் மட்டுமின்றி பாரதமே ஆவலோடு காத்திருக்கிறது. எதிர்பார்ப்பு ஏமாற்றமாக மாறக்கூடாது எனில் அவருக்கு மக்களின் ஒத்துழைப்பும் மத்திய அரசின் ஒத்துழைப்பும் தேவை. தமிழக மக்களின் ஒத்துழைப்பு அவருக்கு நிறையவே கிடைக்கும். ஏனெனில் அவர் மக்களால் உருவாக்கப்பட்ட தலைவர்; தலைவர்களால் உருவாக்கப்பட்ட தலைவர் அல்ல. ஆனால் மத்தியில் உள்ள காங்கிரஸ் அரசு இவருக்கு முழுமையான ஒத்துழைப்பு தருமா என்பதே கேள்வி. இந்தத் தேர்தலின் கசப்பான முடிவுகளை மறந்து, ஆட்சி வேறு கட்சி வேறு என்பதை உணர்ந்து, கருணாநிதி கூறியது போலவே, தங்களை எதிர்த்தவர்களின் நலனுக்காகவும் ஆள்கிறோம் என்ற ஜனநாயகப் பண்பை ராஜீவும் கடைப்பிடித்தால் தமிழகம் வெகு துரிதமாக முன்னேறும். அதன் கடந்த கால மகோந்நதப் பெருமைகளைத் திரும்பப் பெறும்.

தி.மு.க. வெற்றி பெறும் என்பது எதிர்பார்க்கப்பட்ட ஒன்றுதான். எம்.ஜி.ஆர். வாழ்ந்த காலத்திலேயே நடந்த உள்ளாட்சி தேர்தல்களில் தி.மு.க. அடைந்த வெற்றிகள் அ.தி.மு.க. ஆட்சியில் மக்கள் கொண்டிருந்த அதிருப்தியைத் தெளிவாக்கியிருந்தன. மேலும் அ.தி.மு.க. — காங்கிரஸ் கூட்டணி உடைந்த பிறகு, அ.தி.மு.க.வும் நான்கைந்தாகச் சிதறிய பிறகு தி. மு. க. வோட்டுக்கள் அதனைப் பதவிக்கு உயர்த்தும் என்றே கருதப்பட்டது. இதனை அடையாள வாக்கெடுப்புகளும் உறுதி செய்தன.

ஆயினும் தி. மு. க. இவ்வளவு மகத்தான வெற்றி பெறும் என்பது எதிர்பார்க்கப்படவில்லை. தி. மு. க. வட்டாரங்களே இதனை எதிர்பார்க்கவில்லை. அதே போல காங்கிரஸ் இப்படி ஒரு மாபெரும் தோல்வியைச் சந்திக்கும் என்பதும் எதிர்பார்க்கப்படவில்லை. கணிசமான இடங்களைப் பெற்று, சக்தி வாய்ந்த எதிர்க் கட்சியாக விளங்கும் என்று ஜனநாயக நலனை உத்தேசித்து எதிர்பார்த்தோம். இதில் நமக்கு ஏமாற்றமே ஏற்பட்டிருக்கிறது. ஒருவேளை, பூரண மெஜாரிடியுடன் நிலையான ஆட்சி அமைய வேண்டுமே என்ற கவலை வாக்காளர்களை இயக்கி, மிக அதிகமான தொகுதிகளைத் தி. மு. க.வுக்குப் பரிசளித்திருக்கலாம்.

எவ்வாறாயினும் இந்தத் தேர்தல் பாரம்பரியம் மிக்க தேசிய காங்கிரஸ் கட்சியின் இன்றைய தலைவர்களிடையே சோர்வையல்லாது ஊக்கத்தை வளர்க்க வேண்டும் என்று விரும்புகிறோம். கிடைத்துள்ள தொகுதிகளை வெற்றிக்கான அத்தனை படிகளில் ஏறிவிட்டதாகக் கருதி, அடுத்த தேர்தலுக்கு இப்போது முதலே உழைக்க ஆரம்பிக்க வேண்டும். தோல்வி கண்ட தொகுதிகளிலும் காங்கிரஸ் ஆதரவாளர்கள் இருப்பதை எண்ணி உற்சாகம் பெற வேண்டும். அவர்களின் எண்ணிக்கையை வளர்த்துக் கொள்ளப் பாடுபட வேண்டும். அதே சமயத்தில் இந்தத் தேர்தல் கற்றுத் தந்த பாடங்களை மறக்கவும் கூடாது. விமானத்தில் பறந்து வந்து, ஹெலிகாப்டர் பிரசாரம் செய்து, சில குடிசைகளுக்குள் நுழைந்து திரும்புகிற நாடகங்கள் செல்லுபடியாகாது. மக்களைக் கவர்ந்து அவர்கள் சுக துக்கங்களில் பங்கு பெற ஒரே வழி, உட் கட்சி ஜனநாயகத்தை வளர்ப்பதும் தலைவர்களை அடிமட்டத்திலிருந்து படிப்படியாக உருவாகி வரச் செய்வதும்தான். மேலேயிருந்து திணிக்கப்படும் தலைவர்களின் தலைகள் தேர்தலின் போது உருளும் என்பதை இந்தத் தேர்தல் முடிவுகளை விட வன்மையான விதத்தில் வேறெதுவும் உங்களுக்கு உணர்த்தாது.

எல்லாவற்றையும் விட முக்கியம், போயஸ் தோட்டம் பக்கமாகக் கவனம் திரும்பாமல் மனத்தைத் திடமாக வைத்துக் கொள்வதாகும்!

---

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.

# அரசியல் நாகரிகம் என்றால் என்ன?

* அ. ஜமால் மொய்தீன், சென்னை — 52.

? மன்னர் ஹிரோ ஹிட்டோவின் மறைவுக்கு அனுதாபம் தெரிவிக்கும் பொருட்டு, நாட்டின் சகஜ வாழ்க்கை துளியும் சீர்குலையாத வகையில், துக்கம் கடைப்பிடித்த ஜப்பானிய மக்களைப் பற்றி...?

! நாம் பண்பாடு பற்றி நிறையப் பேசுகிறோம், ஜப்பானியர் பேசுவதில்லை; நடத்தையில் காட்டுகிறார்கள். அவ்வளவுதான் வித்தியாசம்! ஆனால் ஒன்று. அத்தனை நாள் செயற்கையாக அவர் உயிரை ஊசலாட வைத்துக் கொண்டிருந்தது என்னவோ — எனக்குப் பிடிக்கவில்லை, தம்பி!

* ஜி. அர்ஜுனன், திருப்பூர்.

? காங்கிரஸும், தி. மு. க. வும் தேர்தல் அறிக்கையில் ''மேலவை அமைப்போம்'' என்று கூறியிருக்கிறார்கள். மேலவை அவசியமா?

! மேலவைக்கு அவசியமில்லாமலா நமது முன்னோர்கள் அதனை உருவாக்கினார்கள்? அது எதற்காக ஏற்படுத்தப்பட்டதோ அதைப் புரிந்து கொண்டு அந்த உணர்வுடன் நடந்து கொண்டால் மேலவை தேவைதான். 'ஸீட்' வழங்காததினால் உருவான அதிருப்தியாளர்களைச் சரிக்கட்ட அதைப் பயன்படுத்துவதானால் தேவையே இல்லை.

* கே. வி. எஸ். மணியன், குடியாத்தம்.

? ராயபுரம் தொகுதி ஜானகி அணி வேட்பாளர் 'மாஜிக்' காட்டுகிறாராமே?

! வார்த்தை ஜாலத்தை விட இந்த இந்திர ஜால் — எவ்வளவோ மேல்!

* கே. மகேஷ், தியாகதுர்கம்.

? சாதிச் சங்கங்கள், ரசிகர் மன்றங்கள் — இரண்டில் மக்களுக்கு அதிகத் தொல்லை தருவது எது?

! வீட்டின் (சமுதாயம்) வெளிச் சுவரில், இண்டு இடுக்கில் விழுந்த விதை ஆலஞ்செடியாக வளர்ந்து, வேரோடி, கவனிக்காது விட்டால் சுவரிலேயே விரிசலும் பிளவும் உண்டாக்குவதைப் பார்த்திருக்கிறீர்களா? அது ஜாதிச் சங்கம். மழைக்காலத்துக்குப் பிறகு வெளிச் சுவரில் பாசி படர்வதைக் கண்டிருக்கிறீர்களா? அது ரசிகர்மன்றம்.

* சாமா, சீர்காழி.

? அரசியல் நாகரிகம் என்றால் என்ன?

! எதிர்க்கட்சியிடம் அறவே இல்லை என்று ஒவ்வொரு கட்சியும் கூறுகின்ற ஒன்று!

* எம். வி. வேங்கடேஸ்வரன், மேல்பட்டி.

? கலைஞர், 'கிருஷ்ணா நதிநீரைக்



• ஊசலாடிய உயிர்



• கிருஷ்ணா நீர் வருமா?



இவருடைய....



• ...அசல் வாரிசு?

கொண்டு வருவேன்,' என்கிறாரே?

! குழாய் வழியாக அல்லாமல் வேறு வழியாக வருமானால், ஜே!

* வி. செல்வராசு, வலங்கைமான்.

? புதுக்கட்சி ஆரம்பிக்கும் பாக்யராஜ் எம். ஜி. ஆரின் அசல் வாரிசாக உருவாவாரா?

! 'ரொட்டி ரொட்டிதான்; சப்பாத்தி சப்பாத்திதான்!' என்பது ஏதோ ஒரு பழைய நாடகத்தின் வசனம். இரண்டையும் தனித் தனியே ருசிக்கலாம். ஆனால் ஒன்றை நினைத்துக்கொண்டு இன்னொன்றைச் சாப்பிட முடியாது!

* இடலை சுதா; குளத்தூர்.

? தமிழகத்தில் வரப் போவது காமராஜர் ஆட்சியா? அண்ணா ஆட்சியா? எம். ஜி. ஆர். ஆட்சியா?

! கலப்பட ஆட்சியாக இல்லாத வரை சரி. அதற்குத்தான் என் பிரார்த்தனை எல்லாம்!

* டி. சீனிவாசன், சென்னை — 79.

? இ. காங்கிரஸ் கள்ளச் சாராயத்தை ஒழித்திடுமா?

! கள்ளச்சாராயத்தைக் கட்டுப்படுத்தலாம்; ஆனால் அடியோடு ஒழிக்க முடியாது. ஆனால் ஒன்று: நல்ல சாராயம் என்பதாக ஒன்று கிடையாது என்பதை உணர்ந்தால் காங்கிரஸின் தேர்தல் அறிக்கையில் பூரண மதுவிலக்கு உறுதி செய்யப்பட்டுள்ளதைப் பாராட்டலாம்.

* அருள்மேரி, காரைக்கால்.

? ராதிகா, இ. மு. க. வின் கொள்கை பரப்புச் செயலாளராமே?



* இ.மு.க.கொ.ப.செ



* எதிர்பார்ப்பு — ஏமாற்றம்.

! டி. ராஜேந்தர் போல எதிர்பார்ப்புக்களை வளர்த்துக் கொள்ளாமல் இருந்தால் ஏமாற்றங்களுக்கு இடமிராது.

* மேலை பழ. நாகப்பன், சென்னை — 41.

? அகத்தியலிங்கம் அலெக்ஸாந்தர் காலில் விழுந்து வணங்கியது பற்றி?

! அதைவிட அசிங்கம், 'அது நமது பண்பாடு, மரபு' என்றெல்லாம் அகத்தியலிங்கம் சார்பாகச் சிலர் வாதாட ஆரம்பித்திருப்பது தான்!

* கே. எஸ். முருகன், சங்கராபுரம்.

* புதிய முதல்வருக்கு மூன்று யோசனைகளை வாசகர்கள் மூலம் பெற்றளிக்கும் நீங்கள், படித்துவிட்டு வேலையில்லாமல் தவிக்கும் இளைஞர்களுக்கு முத்தான யோசனைகளைக் கூறுங்களேன்?

! முருகா! இளைஞர் சமுதாயத்தின் நல்வாழ்வை எண்ணித்தானே முதல்வருக்கு முத்தான யோசனைகள் வழங்கப்படுகின்றன. இதைப் புரிந்து கொள்ளக் கூடாதா, முருகா!

* எம். ராஜேந்திரன், லால்குடி. *

? வோட்டுக்காக லஞ்சம் வாங்கிக் கொள்ளும் வாக்காளர்களைப் பற்றி...?

! சமீபத்தில் அமெரிக்க நண்பர் ஒருவரைச் சந்தித்தேன். இங்கு தேர்தலில் பணம் விளையாடுவது பற்றி அவர் பேசினார். "ஏன், உங்கள் நாட்டில் தேர்தலுக்குப் பணம் செலவிடப்படுவதே இல்லையோ" என்றேன், இடக்காக. "உண்டு; கட்சி சேர்க்கும் பணத்தின் அளவுக்கு ஏற்ப அரசும் கட்சிக்கு ஒரு மான்யம் வழங்குகிறது. தேர்தல் செலவுகளுக்காக. ஆனால் இவையெல்லாம் நாளிதழ் விளம்பரம், டீ. வி. விளம்பரம், போன்றவற்றுக்குத் தான் பயனாகும். வாக்காளரை விலை கொடுத்து வாங்க முடியாது" என்றார். இங்கே சேவல் சின்னம் பதித்த சேலைகள் விநியோகமாவதாக நாளிதழ் செய்தியைச் சுட்டிக் காட்டினார். வெட்கித் தலைகுனிந்தேன். 'நம் வாக்காளரின் அறியாமையையும் வறுமையையும் பயன்படுத்தி அவர்களைத் தன்மானமிழக்கச் செய்யும் சுயநல அரசியல் வாதிகளின் கொடுமை என்று நீங்கும்?' என்று மனம் நொந்து போனேன்.

* ரூ. 20 பரிசு பெறுபவர்:

எம். ராஜேந்திரன்,
19, சன்னதி தெரு,
லால்குடி — 621 601.


தேர்தல் சமயத்தில் இனிமேல் விதிமுறைகளை மீறமாட்டோம்! தப்பு பண்ணமாட்டோம்! மன்னிக்கணும்!


அப்பாடா! விடுதலை!
தமிழ் நாட்டில் தேர்தல் முடிவு


அதெப்படி! அடுத்தாப்புல பஞ்சாயத்து தேர்தல் வந்துதுன்னு வரணுமே!
இந்தியாவுடன் 2வது ஒப்பந்தம்
அமைதிப்படையை திருப்பி அனுப்புதல்
எமர்ஜென்சி ரத்து


அடேங்கப்பா! இன்னும் எவ்வளவு ஞானம் பிறக்கும்?
சிங்களர்
பிரேமதாசா

மடமையைக் கொளுத்துவோம்!

# தேர்தலின் போது தாய்க்குலம்; அப்புறம் மிதியடி!



> "தமிழக விவசாயப் பெண் தொழிலாளர் மிகக் குறைந்த கூலி பெறுகின்றனர்."
>
> — சர்வதேசத் தொழிலாளர் அமைப்பு அறிக்கை. (தினமணி)
>
> "மாதர் சமுதாயத்தின் உழைப்புச் சக்தி அலட்சியத்துக்குள்ளாகிறது."
>
> — மத்திய அமைச்சர் மார்கரெட் ஆல்வா (எக்ஸ்பிரஸ்)

"அரசியல் சூழ்நிலையை விடப் பொருளாதாரச் சூழ்நிலைதான் சுதந்திரத்தை நிர்ணயிப்பதில் முக்கிய பங்கு வகிக்கிறது. பெண்ணுக்குப் பொருளாதார சுதந்திரம் இல்லையென்றால் அவள் எப்போதும் தன் கணவனையோ அல்லது வேறு யாரையோ சார்ந்திருக்க வேண்டி வரும். அப்படி யாரை யாவது சார்ந்திருப்பவர்களுக்கு உண்மையான சுதந்திரம் கிடையாது."

முன்னாள் பாரதப் பிரதமர் ஜவஹர்லால் நேருவின் கருத்து இது. இந்த அடிப்படையில் பார்க்கும் போது இந்தியாவில் மிகப் பெரும்பான்மைப் பெண்கள் (தமிழகத்தில் சுமார் 60 லட்சத்திற்கு மேற்பட்டவர்கள்) உண்மையான சுதந்திரம் இல்லாதவர்களே!

ஒரு பெண்ணுக்கு வேலை வாய்ப்பு இருக்கிறது; சம்பாதிக்கிறாள் என்று வைத்துக் கொண்டால் கூட அத்தகைய பெண்கள் அனைவரும் பொருளாதார சுதந்திரத்தைப் பெற்றவர்களா என்றால் இல்லை என்றுதான் கூற வேண்டும். காரணம், நம் நாட்டின் மொத்த உழைக்கும் பெண்களில் 90 சதத்தினர் அமைப்புசாரா துறையில் (unorganised sector) உள்ளனர்; மிகக் குறைந்த கூலி, பணி நிரந்தரமின்மை, சட்ட உரிமைகள் செயல்படுத்தப்படாதது போன்ற நிலைமைகளை அனுபவிக்கின்றனர். இவர்களுள் மிகப் பெரும்பான்மையினர் (83%) விவசாயம்; கட்டட வேலை ஆகியவைகளில் ஈடுபட்டிருப்பவர்கள்.

"கிராமப்புற பெண்கள் வேலை செய்வதை நிறுத்தி விட்டால் நாடே பட்டினியிருக்க வேண்டியிருக்கும்; ஆனால் அவர்களுடைய உழைப்பு அரசின் புள்ளி விவரங்களில் மிகக் குறைவாக மதிப்பிடப்படுகிறது." என்று சமீபத்தில் டில்லி கருத்தரங்கு ஒன்றில் மத்திய அமைச்சர் மார்கரெட் ஆல்வா பேசியுள்ளார். இதிலிருந்து என்ன தெரிகிறது? பெண்கள் கடுமையாக உழைத்து நாட்டின் பொருளாதார வளர்ச்சிக்குப் பாடுபட்டபோதிலும் அவர்கள் உழைப்பிற்கு அதிகாரபூர்வமான அங்கீகாரம் கூடக் கிடைப்பதில்லை என்பதுதான். அதே சமயம், நாட்டில் மொத்தக் குடும்பங்களில் சுமார் 30 சதவீதம் குடும்பங்கள் பெண்ணின் வருமானத்தையே பிரதானமாக நம்பியுள்ளன என்பதையும் கவனிக்க வேண்டும். (தேசியத் தொலை நோக்குத் திட்டத்தின் கணிப்பு) பெண்களின் ஊதியத்தை உயர்த்த வேண்டியதின் அவசியத்தை இது வலியுறுத்திக் காட்டுகிறது.

அமைச்சரிலிருந்து பொருளியல் ஆய்வாளர்கள் வரை கிராமபுறப் பெண்களுக்காகக் கண்ணீர் விடுகின்றனர். ஆனால், அவர்களுக்குக் குறைந்தபட்ச சட்ட ஊதியம் கிடைக்கும் என்பதற்குக் கூட அரசால் உத்திரவாதம் அளிக்க முடியவில்லை. விவசாயத்தில் பாலின அடிப்படையில் வேலைகளைப் பிரித்துப் பெண்களுக்குக் குறைவான கூலி நிர்ணயிக்கப்படுகிறது. இத்தகைய ஒப்பந்தத்திற்கு அரசும் உடந்தையே. 1984—85—இல் தமிழ் நாட்டில் விவசாய ஆண், பெண் தொழிலாளர்களின் தினக் கூலி, முறையே, ரூ. 8.83, ரூ. 5.05. இதே ஆண்டு கேரளத்தில் ஒரு விவசாயப் பெண் தமிழகத்துப் பெண்ணை விட ஒரு நாளைக்கு ரூ. 7/— கூலி அதிகம் (ரூ. 12.34) பெற்றாள். (ஐ.எல்.ஓ. அறிக்கை, தினமணி 9.1.88) இது எப்படி சாத்தியமாயிற்று? கேரளத்தின் வலுவான ஜனநாயக, தொழிற்சங்க இயக்கம் நடத்திய போராட்டங்களின் பலனே இது. விவசாயத் தொழிலாளர் மத்தியில் இத்தகைய சக்தியான இயக்கம் இன்னும் தமிழகத்தில் உருவாகவில்லை.

தமிழகத்தில் சிலர் புரட்சித் தலைவர்களாவதற்கும், தேர்தல் சமயத்தில் ஓட்டு வாங்குவதற்கும் அத்தியாவசியமாக இருந்த 'தாய்க்குலம்,' பின்னால் சமூக மிதியடியாகவும், சுமைதாங்கியாகவுமே நடத்தப்பட்டு வந்துள்ளது. விவசாயக் கூலிப் போராட்டங்கள் அரசின் ஒப்புதலோடு தொடர்ந்து நசுக்கப்பட்டு வந்துள்ளன. இது தொடர்பாக மத்திய அரசின் பார்வையிலும் அடிப்படையான வேற்றுமை இல்லை. பெண்கள் நிலை பற்றிய விமர்சனங்களை அரசு ஆய்வுகளே நிறையச் செய்கின்றன. கருத்தரங்குகள் நடக்கின்றன. ஆனால், இந் நிலையை மாற்ற தீவிர நடவடிக்கைகளை அரசு அவசர உணர்வோடு எடுக்கக் காணோம்!

— மைதிலி சிவராமன்.

காலம் கடந்த கடும் மழைகள், சாலைகளில் எதிர்பாராத வெள்ளங்கள், மண்சரிவுகள், பலகாத தூரம் குண்டு குழிகள் — ஆம், இந்தியச் சாலைகளில் எதிர்பாராதவற்றை எதிர்பார்க்கலாம். இத்தகைய எதிர்பாராத சவால்களை நேரிடுவதற்கென்றே பிரத்தியேகமாக ஒரு டயர் உருவாக்கப்பட்டுள்ளது. உங்கள் வண்டியில் பயணம் செய்யும் 35 அல்லது அதற்கு மேல் உள்ள ஒவ்வொரு பயணியையும் ஆயிரக்கணக்கான கிலோ மீட்டர்களுக்குப் பாதுகாப்பாக ஏற்றிச் செல்வது — விக்ராந்த்.

**உலகின் முதன்மையான வேக ஓட்ட டயரின் தொழில் நுட்பம்**

ஒவ்வொரு விக்ராந்த் டயரின் பின்னிலும் இங்கிலாந்தின் ஏவான் நிறுவனத்தின் மேம்பட்ட தொழில் நுட்பம் உள்ளது. இந்நிறுவனம் மோட்டார் வண்டிகளின் ராஜாவான, உலகின் முதன்மையான ஓட்டப் பந்தய டயர்கள் பொருத்தப்பட்ட ரோல்ஸ்-ராய்ஸின் தேவைகளைச் சந்திக்கும் பெரிய நிறுவனமாகும். விக்ராந்தின் ஆராய்ச்சி மற்றும் அபிவிருத்தி இலாகா ஏவான் தொழில் நுட்பத்தைப் பின்பற்றி இந்தியச் சாலைகளுக்கு ஏற்றபடி செயல்திறன் வாய்ந்ததாக டயர்களைத் தயாரிக்கிறது.

**இந்தியாவின் முதல் டிரக் ரேடியலைத் தயாரித்த தொழில் நுட்பம்**

விக்ராந்தின் ஆராய்ச்சி மற்றும் அபிவிருத்தி இலாகா டிரக் ரேடியல்களைப் பற்றி ஆய்ந்ததின் விளைவு இங்கிலாந்தின் மார்க்கெட்டினை வென்ற மிகமிக வலிமை வாய்ந்த ஒரு டயராகும். இதன் காரணமாக இங்கிலாந்துக்கு டிரக் ரேடியல்களை ஏற்றுமதி செய்த முதல் கம்பெனி விக்ராந்த் எனப் பெயர் பெற்றது.

**விக்ராந்த் — புதிய வண்டியில் பொருத்தப்படும் ஒரிஜினல் பாகம்**

விக்ராந்தின் செயல்திறன் நாடு முழுதும் போக்குவரத்துத் துறையில் நம்பகரமானதாக நிரூபிக்கப்பட்டுள்ளது. முன்னணி நிறுவனங்களான டெல்கோ, அசோக் லேலண்டு வண்டிகளில் இது ஒரிஜினல் பாகமாக பொருத்தப்படுகிறது. பெரும்பான்மையான மாநில போக்குவரத்து நிர்வாகங்களின் பஸ்களில் பல்லாயிரக்கணக்கான மக்களை நாடு முழுவதும் ஏற்றிச் செல்கிறது.

எனவே, செயல்திறன் நிரூபிக்கப்பட்டு, நவீன தொழில் நுட்பத்தைப் பின்பற்றி அமைக்கப்பட்டு, எதிர்பாராத சவால்களை நேரிட வரும்போது நீங்கள் நம்பக் கூடியதாக இருக்க வேண்டிய டயர் உங்களுக்கு வேண்டும் எனின், எந்த டயரைத் தேர்ந்தெடுக்க வேண்டும் என்பதை இப்போது அறிவீர்கள்!



**VIKRANT**

நம்பகமான டயர்
பொறுப்பான கம்பெனி

# சுக போகத் தீவுகள்

3

மாமாவை மிக உரிமையாக அழைத்துப் பேசியவள், ஒரு காலத்தில் மிகப் புகழ் பெற்ற நட்சத்திரமாக ஜொலித்த கோகிலா தான் என்பதை அறிந்ததும் கிருஷ்ணமூர்த்திக்கு மிகுந்த ஆச்சரியம் ஏற்பட்டது. ஊரில், கூரைக் கொட்டகை போட்ட சினிமா அரங்கில், பட்டாணிக் கடலையைக் கொரித்துக் கொண்டே கோகிலா நடித்த எத்தனை சினிமாக்களை அவன் பார்த்திருக்கிறான். மாதம் ஒரு முறை சினிமா பார்க்க அப்பா அவனை அனுமதிப்பார். சினிமா டிக்கெட் மூன்றணா. கூடவே ஓர் அணா சேர்த்துக் கொடுப்பார். ஓர் அணாவுக்குப் பட்டாணிக் கடலை வாங்கினால், இடைவேளை வரை கொரித்துக் கொண்டிருக்கலாமே!

அந்தக் கோகிலாவா இது!

மாமா, அவளையும் அவனையும் பரஸ்பரம் அறிமுகப்படுத்தி வைத்தார்.

''இவங்கதான் கோகிலா. நமக்கு ரொம்ப வேண்டப்பட்டவர். இது அவங்க பெண்... பேரு... உம்... விநோதினி... சரிதானே...? இவன் நம் ஊர்ப் பையன். எனக்கு மச்சினன் முறை. எம். ஏ. படிச்சிருக்கான்.''

''பெயரைச் சொல்லலியே...?'' என்றாள் கோகிலா, அவனைப் பார்த்தபடி.

''கிருஷ்ணமூர்த்தி. மூர்த்தின்னு கூப்பிடுவோம்.''

''அப்படின்னா, இனிமேல் மிஸ்டர் மூர்த்திதான் உங்களுக்குப் பி. ஏ.வா இருக்கப் போறார்னு சொல்லுங்கள்.''

''கரெக்ட்... எப்படிக் கண்டுபிடித்தீர்கள்?'' என்று அதிக வியப்புடன் கேட்டார் மாமா.

''இதில் என்ன ஆச்சரியம். உங்கள் சொந்தக்காரர். படித்திருக்கிறார். அழகான இளைஞர். நம்பிக்கைக்குப் பாத்திரமானவர். இல்லையென்றால், இந்த இடத்துக்கு அழைத்து வரமாட்டீர்கள். என்னை அறிமுகப்படுத்தி வைத்திருக்க மாட்டீர்கள். ஒன்றும் ஒன்றும் இரண்டு. சரிதானே...?''

''இதுதான் கோகிலா! சும்மாவா? அமைச்சரே உங்க யோசனைகளைக் கேட்டுத்தானே நடக்கிறார்?''

''ஐயோ. இந்தப் பழி வேறேயா? சரி, மிஸ்டர் நாயகம். நான் உங்களுடன் பேச வேண்டுமே... சௌகர்யப்படுமா?''

''கோகிலாவுடன் பேச எனக்குக் கொடுத்து வைத்திருக்க வேண்டுமே...'' என்ற மாமா, அந்தப் பதிலைக் கேட்டு நாணுவது போல் கண்களைச் சிமிட்டிச் சிரித்த கோகிலாவை ரசித்தபடி, அவனும் விநோதினியும் நிற்பதை அப்போதுதான் கவனித்தவர் போல, விநோதினியைப் பார்த்துச் சொன்னார்.,

''நீ மூர்த்திக்குக் 'கம்பெனி' கொடு, விநோதினி. நாங்கள் கொஞ்சம் பேச வேண்டியிருக்கிறது. நீங்கள் சாப்பிட்டுக் கொண்டே பேசலாம்.''

விநோதினியும் மூர்த்தியும் தனியான ஒரு மேசைக்குச் சென்று எதிர் எதிராக அமர்ந்தார்கள்.

மூர்த்திக்கு இன்னும் ஆச்சரியம் அகன்றபாடில்லை.

கோகிலாவைப் பக்கத்தில் நின்று பார்த்தேன். அவள் என்னுடன் பேசினாள் என்று சொன்னால், ஊரிலிருக்கிற அவன் சிநேகிதர்கள் நம்புவார்களா? மாட்டார்கள். 'பய ரீல் விடறான்' என்பார்கள். சரசு கூட நம்புவாளா என்றால், மாட்டாள். ஆனாலும் அது நிஜம்.

அடடா! அந்தக் காலத்தில் கோகிலா எப்படி இருந்தாள்? சற்றேறக் குறைய ஆறடி உயரமும், அளவான உடல்வாகும், சும்மா பார்த்தாலே பேசும் விழிகளும், உயிரைச் சுண்டி இழுக்கும் அந்தச் சலவைப் புன்னகையும், வெற்றிலை போடாமலேயே சிவந்த அந்த ஆரோக்கியமான உதடுகளும், ஒவ்வொரு அசைவிலும் மிளிரும் நடன நளினமும் விவரம் புரிந்தும் புரியாத அந்தப் பால்ய வயதில் அவனை என்னமாய்க் கிறங்க அடித்தன!

அவளேதான். கொஞ்சம் சதை போட்டிருக்கிறது. கண்களில் இமையை மறைக்க முயலும் சதை. கண்ணாடி போட்டிருந்தாள். முதுமையின் சுட்டு விரல் அவளை

பிரபஞ்சன்

நோக்கி நீண்டுவிட்டிருந்தது. அரண்மனை கவனிப்பார் இன்மையால் பாழ்படக் கூடும். எனினும் அதன் காம்பீர்யம் குன்றிப் போகுமா?

"என்ன நீங்கள் பாட்டுக்கு யோசித்துக் கொண்டே இருக்கிறீர்கள். வாய் திறந்து பேசக் கூடாதா?"

உத்தமபாளையத்து டூரிங் டாக்கீசிலிருந்து, அந்த நட்சத்திர ஓட்டல் நாற்காலியில் பொத்தென்று வந்து விழுந்தான் கிருஷ்ணமூர்த்தி.

"மன்னியுங்கள். யோசனைதான். சொன்னால், கோபித்துக் கொள்ள மாட்டீர்களே!"

"சொல்லுங்கள்."

"உங்கள் அம்மாவைப் பற்றித்தான் யோசித்துக் கொண்டிருந்தேன்."

"அம்மாவைப் பற்றியா?"

"ஆமாம். நான் கோகிலாவின் ரசிகன். அவர் அதிகமாக ஜோடி சேர்ந்து நடித்தது கணபதியோடுதானே? கணபதியும் இவரும் ஜோடியாக வந்தால், எவ்வளவு பொருத்தமாக இருக்கும் தெரியுமா? சோப்புப் பெட்டி மாதிரி கச்சிதமாக இருப்பார்கள். என்னைப் போன்ற பையன்கள், கணபதியின் இடத்தில் தங்களை வைத்துக் கொள்வார்கள். எல்லோருக்கும் கோகிலாதான் தங்களின் கதாநாயகி. இந்த 'ஐடன்டிபிகேஷன்' தானே, அதாவது தன்னை இன்னொருவராகக் கற்பனை செய்து கொள்வதுதானே காதல் சினிமாவை, காதல் கதையை வெற்றி பெறச் செய்கிறது? அழகிய பெண்கள் அமராவதிகளாகிறார்களோ இல்லையோ, பையன்கள் அம்பிகாபதிகளாகி விடுகிறார்கள், இல்லையா? நானும் அப்படித்தான். அந்த அம்மாவை நான் அப்படி நேசித்தேன். அவர், ராமசாமியோடும் ஜோடியாகச் சில படங்களில் வருவார். அவை எனக்குப் பிடிப்பதில்லை. கோகிலா கணபதியை விட்டுப் பிரிந்து, ராமசாமியோடு எப்படிச் சேரலாம்? எனக்குக் கோபம் கோபமாய் வரும். கொஞ்ச நாள் முகத்தைத் தூக்கி வைத்துக் கொண்டு இருப்பேன். அப்புறம், அவரைப் போனால் போகிறது என்று மன்னித்து விடுவேன்."

மூன்றுமேஜைகள்தள்ளி அமர்ந்து பேசிக் கொண்டிருந்த மாமாவும், கோகிலாவும் திரும்பிப் பார்க்கும் வகையில் சத்



தம் போட்டுச் சிரித்தாள் விநோதினி. சிரித்து ஓய்ந்து அவள் சொன்னாள்:

"ரொம்ப வெள்ளையாக, பளிச்சென்று பேசுகிறீர்கள். உங்கள் பேச்சு எனக்குப் பிடித்திருக்கிறது."

ஐந்து விரல்களையும் சந்தனக் கிண்ணத்தில் வைத்து, அப்படியே கையை எடுத்துக் கன்னத்தில் வைத்தது, மாதிரி குளிர்ச்சியாய் இருந்தது கிருஷ்ணமூர்த்திக்கு.

"நீங்கள் படித்துக் கொண்டிருக்கிறீர்களா?"

"ஆராய்ச்சி செய்து கொண்டிருக்கிறேன். பொருளாதாரம்தான் என் துறை. சரித்திரத்தில் எனக்கு ஈடுபாடு உண்டு."

"நீங்களும் உங்கள் அம்மாவைப் போல் நடிப்புத் துறையில் ஈடுபட்டிருக்கலாம்."

"ஏன்? என் அம்மாவைப் போல் நான் ஏன் இருக்க வேண்டும்? நடிப்பு என்ன, இன்றைய அரசியலில் இருப்பது மாதிரி பரம்பரைச் சொத்தா?"

ஒரு பரிசாரகர் அவர்கள் அருகில் வந்து, வினாக்குறி மாதிரி பணிவாக வளைந்து நின்றார்.

"என்ன சாப்பிடுகிறீர்கள்?"

"எனக்குப் பசிக்கிறது, மிஸ் விநோதினி. காலை நாலு மணிக்கு ஊரில இருந்து புறப்பட்டவன். இதுவரை மூன்று இட்லி, நாலு காப்பி, கொஞ்சம் கடலை மட்டும்தான் சாப்பிட்டிருக்கிறேன். சோறு தின்ன வேண்டும் போல் ஆசையாக இருக்கிறது."

விநோதினி, பிரைட் சாதத்துக்கும், சிக்கன் கௌலாப்புக்கும் வேண்டுதல் சொன்னாள்.

"நான் நடிக்கப் போயிருக்க வேண்டும் என்றீர்களே, ஏன் அப்படிச் சொன்னீர்கள்?"

கிருஷ்ணமூர்த்தி தயங்கினான். ஆனாலும் சொன்னான். "நீங்கள் ரொம்ப அழகாக இருக்கிறீர்கள். அதனால் சொன்னேன்.

விநோதினி, இந்த முறை சத்தம் இல்லாமல் சிரித்தாள். லேசாகத் தலையைக் கவிழ்த்துக் கொண்டு, அழகிய ஒழுங்கான பற்கள் தெரியச் சிரித்தாள்.

"அழகாய் இருப்பது என்றால் என்ன?"

அவளது கேள்வி அவனை யோசிக்க வைத்து விட்டது. யோசித்தபடியேதான் உண்டு கொண்டிருந்தான்.

"பாவம் பசியாக இருந்திருக்கிறீர்கள். நன்றாகச் சாப்பிடுங்கள். இன்னும் வேண்டியதை வாங்கிக் கொள்ளலாம்."

அவள் குரலில் உண்மையான அக்கறை தொனித்தது. அது அவனைத் தொட்டது. தவிர்க்க முடியாமல் அம்மாவின் ஞாபகம் வந்தது. அவனுக்கு எது, எந்த வகையில் பிடிக்கும் என்பதை அம்மா மட்டுமே அறிவாள். மனசுக்குள் இந்தக் கூட்டு, இந்தப் பொரியல் நன்றாக இருக்கிறதே என்று அவன் நினைக்கும் முன்னமே, இலையில் அது வந்து விழும். அம்மா மனசைப் படிக்கும் கலையை எங்கே கற்றாள் என்று இருக்கும். கற்று வருவதல்ல அது. இயல்பில் இருப்பது அது. அன்பு மட்டுமாய் நிறைந்த மனசுக்கு மட்டுமே தெரிகிற சூட்சுமம் அது.

"உங்கள் மாமா, உங்களை அரசியலுக்குத் தயார் செய்கிறாரா?"?"

"சேச்சே. வேலை கிடைக்கிற வரை அவருக்கு உதவியாய் இருப்பேன். அவ்வளவுதான். நமக்கு அரசியல் எல்லாம் சரிவராது, விநோதினி!"

"ஏன் சரிவராது என்கிறீர்கள்?"

"முக்கியமாய் எனக்கு அதில் ஈடுபாடு இல்லை. அந்த அகட விகட சாமர்த்தியம், வானத்தை வில்லாய் வளைத்து, மணலைக் கயிறாய்த் திரிக்கிற வல்லமை எதுவும் எனக்குக் கிடையாது."

"இப்போது சொன்னீர்களே, ஈடுபாடு இல்லை என்று. அதுவேதான், நான் நடிகை ஆகாததற்குக் காரணமும். எனக்கு அதில் பிடிப்பில்லை."

உண்டு முடித்து அவர்கள் தேநீர் அருந்தினார்கள்.

"தேநீர் ரொம்ப வித்தியாசமான சுவையாய் இருக்கிறதே. ஆனால் நன்றாக இருக்கிறது.

அவள் அவனைப் பார்த்துச் சிரித்தாள்.

"உண்மையான தேயிலையால் ஆன தேநீர் இது. வெறும், சக்கைகளால் ஆன தேநீரைக் குடித்து, அசல் தேநீர் உங்களுக்கு வித்தியாசமாய்த் தெரிகிறது பாருங்கள். நம் சுவைகள் அனைத்துமே இப்படித்தான் மாறி விட்டன."

"மாமாவும், உங்கள் அம்மாவும் ஏதோ முக்கியமான விஷயமாகப் பேசிக் கொண்டிருக்கிறார்கள் போலும். இன்னும் முடிக்கவில்லையே..."

"ஆமாம்.. என் அம்மாவும் உங்கள் மாமாவும் அணு ஆயுத ஒழிப்பு பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறார்கள், போங்கள்! ஏதோ நாலாந்தர அரசியல் விவகாரம்."

"உங்களுக்கு அரசியல் பிடிக்காதா?"

"அரசியல் பிடிக்கும். ஆனால், நம் அரசியல்வாதிகளின் காரியங்கள் அரசியலில் சேர்த்தியா? ஓர் இலட்சியத்துக்காக மரணத்தைத் தொட்டுத் திரும்பும் அளவுக்கு உண்ணாவிரதம் இருந்த காந்தியும் ஓர்

---

"என்ன அந்த போலீஸ், 'ஜலேலா, ஜலேலா'ன்னு க த் தி க் கி ட் டு ப் போறாரு...?"

"குற்றவாளியை வலைவீசித் தேடுகிறாராம்!"

— புதூர் முருகன்.



அரசியல்வாதி என்று சொன்ன நாவால், ஆறு மணி நேர உண்ணாவிரதம் என்று உட்காருகிற இவர்களையும் அரசியல்வாதிகள் என்று சொல்வது ஆபாசமாக இல்லையா? அசல் அரசியலுக்கும் நம்மூர் அரசியலுக்கும் உள்ள இடைவெளி சந்திரனுக்கும் பூமிக்கும் உள்ள இடைவெளி அல்லவா?

கோகிலா எழுந்திருப்பது தெரிந்தது. கிருஷ்ணமூர்த்தியும் விநோதினியும் எழுந்து, படியிறங்கிக் காரின் அருகில் வந்து நின்றார்கள்.

''உங்கள் அம்மாவுக்கும் முதுமை வந்து விட்டது. அந்தக் காலத்து, மின்னல் பாய்வது மாதிரி பளீரென்று பாய்ந்து தாக்கிய அழகும் கவர்ச்சியும் எங்கே போய் விட்டன?''

காரில் சாய்ந்தபடி, பையைத் திறந்து, கையகல, பெண்களுக்குண்டான கைக்குட்டையால் முகத்தை அழுந்தத் துடைத்துக் கொண்டு விநோதினி சொன்னாள்.

''அழகும் கவர்ச்சியும் அம்மாவை விட்டு எங்கும் ஓடிப் போய் விடவில்லை. சின்ன வயசில் உங்களைப் பைத்தியமாய் அடித்த அந்த வசீகரம், அம்மாவிடம் இருந்த கலையின் வசீகரம். உண்மையில் அவர் அழகு என்பது அதுதான். நீங்கள் உடம்பு வாகை அழகு என்று தப்பாய்ப் புரிந்து கொண்டிருக்கிறீர்கள். அழகு, எப்போதும் இருப்பது. அழியக் கூடியது, அழகாய் இருக்க முடியாது.''

**மா**மாவுடன் காரில் திரும்பி வந்து கொண்டிருக்கும் போதும், கிருஷ்ணமூர்த்தியின் மனசுக்குள் விநோதினியின் பேச்சும், கருத்தும் அலைகளாய்த் திரண்டு திரண்டு எழுந்தன. நன்கு வேக வைக்கப்பட்ட மொச்சைப் பயிறு மாதிரி முழுசு முழுசாய் வந்த அவள் வார்த்தைகளும், மீனின் கண்கள் மாதிரி பளிச்சென்று தெறித்துச் சிதறிய அவற்றின் வெளிச்சமும் அவனுக்கு பிரமிப்பாய் இருந்தது.

''கிருஷ்ணமூர்த்தி! உனக்கு மக்காச் சோளத்தைப் பற்றி ஏதாவது தெரியுமா?''

''என்ன?''

''மக்காச் சோளம் பற்றி.''

''அதிகமாய் ஒன்றும் தெரியாது, மாமா. அவசியம் என்றால் தெரிந்து கொள்கிறேன்.''

''நாளைக்கு நீ ரெண்டு காரியம் செய்ய வேண்டும். காலையில், காரை எடுத்துக் கொண்டு நூலகத்துக்குச் சென்று மக்காச் சோளம் பற்றி விவரங்கள் சேகரி. மாலையில் நாம் கோகிலாவை அவள் வீட்டில் சந்திக்கிறோம்.''

சில நிமிடங்கள் சென்று, மாமா திரும்பவும் கேட்டார்.

''அந்தப் பெண் விநோதினி என்னைப் பற்றி ஏதேனும் சொன்னாளா?''

''இல்லையே...''

''திமிர்பிடித்தவன்.''

கிருஷ்ணமூர்த்திக்குத் திகைப்பாய் இருந்தது.

(தொடரும்)

# நழுப்புச் சுதேசிகள்

கூட்டம் நிரம்பி வழிந்தது. அந்தப் பெரிய ஹாலில் போடப்பட்டிருந்த நாற்காலிகளில் ஒன்றுகூடக் காலியாக இல்லை. இந்தக் கோடியிலிருந்து அந்தக் கோடி வரை அவனும் பார்த்து விட்டான். காலியிடம் எதுவுமே இல்லை.

இவனைப் போலவே தாமதமாக வந்து, இடம் கிடைக்காத சிலர் அங்கங்கே ஓரமாக நின்று கொண்டிருந்தார்கள்.

சொந்த வேலையாகப் பட்டணத்திற்கு



வந்திருந்த சுந்தருக்கு இரவு பத்து மணிக்குத் தான் பஸ். அதுவரை என்ன செய்யலாம் என்ற யோசனையுடன் நடந்து கொண்டிருந்தவன் கண்களில் இந்தக் கருத்தரங்கம் பற்றிய 'போஸ்டர்' பட்டதும் நேராக இங்கே வந்து விட்டான்.

'ஊரக வளர்ச்சியில் பட்டதாரி இளைஞர்களின் பங்கு' என்பது பற்றிய கருத்தரங்கு அது.

இத்தகைய கருத்தரங்குகளுக்குக்கூட நகரத்தில் இவ்வளவு கூட்டம் வருகிறதா என்று



[illegible] இருந்தது.

வரவேற்புரை முடிந்து தலைவர் பேசத் தொடங்கியிருந்தார். தலைப்பை விட்டு விட்டு எங்கெங்கோ சுற்றிக் கொண்டிருந்தார் அவர். பட்டதாரி இளைஞர்கள் எதிலும் பிடிப்பில்லாமலும் பொறுப்பில்லாமலும் நடந்து கொள்வதாக அவர் பேசிய கருத்து, அவனுக்கு எரிச்சல் ஊட்டுவதாக இருந்தது.

அவருக்குத் தெரிந்த யாரோ ஒரு சிலரை எண்ணிக் கொண்டு அவர் பேசுகிறார் என்று நினைத்துக் கொண்டான் அவன்.

''இந்தக் கருத்தரங்கில் முதலாவதாகச் செல்வி ஊர்மிளா அவர்களைப் பேசுமாறு அழைக்கிறேன்,'' என்று சொல்லிவிட்டுக் கூட்டத்தின் ஒருமித்த கைதட்டல்களைப் பெற்றுக் கொண்டு, ஒரு வழியாகத் தம் பேச்சை முடித்தார் தலைவர்.

இருபது, இருபத்தோரு வயது மதிக்கத் தக்க ஒரு பெண் மைக்கின் முன்னால் வந்து நின்று, கூட்டத்தைப் பார்த்து, நளினமாக, ''வணக்கம்'' என்று சொன்ன போது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது.

''பல அறிஞர்கள் பேச இருக்கின்ற இந்தக் கருத்தரங்கில் வயதில் மிகச் சிறியவளான எனக்கும் வாய்ப்பளித்தமைக்கு முதலில் என் நன்றியைத் தெரிவித்துக் கொள்கிறேன்...''

கணீரென்ற குரலில் அவள் இப்படிப் பேசத் தொடங்கியதுமே கூட்டத்தில் ஏற்பட்ட அமைதி, அவள் பேச்சைக் கேட்க அவர்கள் எவ்வளவு ஆவலாய் இருக்கிறார்கள் என்பதைத் தெளிவுபடுத்தியது.

''முன்னைப் போல் அல்லாமல் இப்போதெல்லாம் ஆண்டுதோறும் ஏராளமான ஆண்களும் பெண்களும் பட்டப்படிப்பை முடித்து, கல்லூரியிலிருந்து வெளிவந்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் பட்டம் பெற்று வெளிவரும் பெரும்பான்மையினரும் அரசிலோ வேறு நிறுவனங்களிலோ வேலை தேடித்தர இந்தப் பட்டம் உதவ வேண்டும் என்ற எதிர்பார்ப்புடன் தான் இருக்கிறார்கள். தொழிலியல் பட்டம் பெற்றவர்கள் கூட இவ்வாறு பணி தேடி அலைவதுதான் இன்றைய நடைமுறையாக

[illegible] சாய நாடு. இந்நாட்டின் பெரும்பான்மையான தொழில், விவசாயமாக இருந்த போதும் கூட, இன்றைய விஞ்ஞான வளர்ச்சியின் காரணமாக ஏற்பட்டுள்ள புதிய முயற்சிகளைப் பற்றியெல்லாம் சரிவரப் புரிந்து கொள்ளாத நிலையில்தான் இன்று கிராமப்புறங்களில் விவசாயம் நடைபெற்று வருகிறது. வேளாண்மைத் துறையில் பட்டம் பெற்ற மாணவர்கள் கூட நம் நாட்டின் விவசாய வளர்ச்சிக்கு ஆக்கபூர்வமாகத் தங்கள் பங்கை ஆற்ற முன்வராமல் இருப்பது வருந்தத்தக்க ஒரு நிலையாகும்'' — என்று அந்தப் பெண் பேசிக் கொண்டிருந்தாள்.

'இல்லை. வேளாண்மைத் துறையில் பட்டம் பெற்று விட்டு எந்த வேலைக்கும் போகாமல் எங்கள் கிராமத்தின் வளர்ச்சிக்காக என்னை நான் ஈடுபடுத்திக் கொண்டிருக்கிறேன். என்னைப் போன்று வேறு பலரும் இருக்கலாம்!' — என்று அவளுக்கு

**பீஷ்மன்**

அப்போதே பதில் சொல்லத் தோன்றியது அவனுக்கு.

தம்முடைய மகன் தம்மைப் போல் அல்லாமல் அரசாங்கத்தில் ஓர் உயர்ந்த அதிகாரியாக வரவேண்டும் என்ற கனவுடன் தான் அவனைக் கல்லூரிக்கு அனுப்பி இருந்தார் அவன் தந்தை. ஆனால், 'நான் எந்த வேலைக்கும் போகப் போறதில்லை; விவசாயத்தைத்தான் கவனித்துக் கொள்ளப் போகிறேன்' — என்று அவன் சொன்ன போது, அவருக்கு அது மிகவும் அதிர்ச்சியாகத்தான் இருந்தது. அவர் அவனிடம் எவ்வளவோ வாதாடிப் பார்த்தும் பயனில்லாது போயிற்று. பட்டப்படிப்பு தனக்குக் கொடுத்திருக்கும் அறிவோடு அத்துறையில் இன்னும் கற்றுக் கொண்டு தங்கள் கிராமத்தின் விவசாயத்தை அபிவிருத்தி செய்வதுதான் அவனுடைய லட்சியமாக இருந்தது.

இப்போது இந்தப் பெண் நீட்டி முழக்கிப் பேசிக் கொண்டிருப்பவற்றையெல்லாம் அவன் ஏற்கெனவே தன்னுடைய கிராமத்தில் செயற்படுத்தத் தொடங்கி இருந்தான்.

தன்னுடைய சிந்தனையை ஒட்டிய முறையில் அமைந்திருந்த ஊர்மிளாவின் பேச்சு அவனை வெகுவாகக் கவர்ந்து விட்டது.

'நேரம் இருந்தால், கூட்டம் முடிந்ததும் அந்தப் பெண்ணைச் சந்தித்து அவளிடம் தன் பாராட்டை நேரில் தெரிவிக்க வேண்டும்' என்று நினைத்துக் கொண்டான் அவன்.

கூட்டம் கலைந்து ஜனங்கள் வெளியேறிக் கொண்டிருந்த போது அவன் மேடைக்கருகில் போய் நின்று கொண்டான்.

ஊர்மிளாவும் அவளுடன் ஒரு பெரியவரும் மேடையிலிருந்து இறங்கினார்கள்.

"வணக்கம்..."

அவனுக்குப் பதில் வணக்கம் செலுத்தி விட்டு, ஒரு புன்னகையுடன் ஒரு நிமிடம் தயங்கி நின்றான் அவன்.

"உங்க பேச்சு ரொம்ப நல்லா இருந்தது. நான் பி. எஸ்ஸி. அக்ரி படிச்சுட்டு ஒரு லட்சியத்தோட எங்க கிராமத்திலே விவசாயம் பார்த்துக்கிட்டு இருக்கேன். தேவையான கருத்தை ரொம்ப அழகான தமிழில் நீங்க பேசினீங்க. பாராட்டுக்கள்!"

"ரொம்ப நன்றிங்க," என்று வாய் கொள்ளாத புன்னகையுடன் அவனிடம் சொல்லிவிட்டுப் பக்கத்திலிருந்த பெரியவரைப் பார்த்து, "இந்த மாதிரி மற்ற பட்டதாரி இளைஞர்களும் முன்வந்தால் எவ்வளவோ நல்லா இருக்கும் இல்லையா?" என்றாள் அவள்.

அவள் கருத்தை ஆமோதிக்கும் பாவனையில் பெருந்தன்மையாக ஒரு புன்னகையை உதிர்த்தார் அவர்.

"வணக்கம் ஐயா. உங்கள் மகள் பேச்சு ரொம்பவும் அற்புதமாக இருந்தது. இதைப் பற்றி நிறையப் பேசணும். மீண்டும் வந்தாச் சந்திக்கிறேன். உங்க முகவரியைத் தெரிவிச்சீங்கன்னா உதவியா இருக்கும்."

அவன் சொல்லி முடிப்பதற்குள் தன் கைப் பையிலிருந்து ஒரு விசிட்டிங் கார்டை எடுத்து அவனிடம் நீட்டினாள் ஊர்மிளா.

"அப்ப நாங்க வர்றோம்."

அவர்கள் கிளம்பிப் போய் விட்டார்கள்.

கையில் இருந்த விசிட்டிங் கார்டையே பார்த்துக் கொண்டு நின்றான் சுந்தர். 'ஊர்மிளா த/பெ. வேலாயுதம்பிள்ளை' என்ற பெயரும் முகவரியும் அதில் இருந்தன. அந்த விசிட்டிங் கார்டைத் தன் பர்ஸில் பத்திரமாக வைத்துக் கொண்டு கிளம்பினான் அவன்.

அந்தப் பெண் ஊர்மிளாவின் நினைவில், அன்று அவனுக்குத் தூக்கமே வரவில்லை.

'என்னுடைய லட்சியத்தையும் கனவையும் புரிந்து கொண்ட ஒரு நபரைக் கூட, நான் சந்திக்க முடியவில்லை. ஆனால், நகரத்தின் இந்த நாகரிகச் சூழ்நிலையில், இந்தப் பெண்ணின் சிந்தனைகள் நூற்றுக்கு நூறு என் சிந்தனைகளுடன் எப்படி ஒத்துப் போகின்றன? இன்றைக்கு இந்தக் கூட்டத்திற்கு என்னைப் போக வைத்தது எது? இந்தப் பெண்ணைச் சந்திக்க வைத்து அவளைப் பற்றிய சிந்தனையிலேயே என் மனத்தை அல்லாட வைப்பது எது?'

நினைக்கும் போது வேடிக்கையாக இருந்தாலும் கூட, அந்த நினைப்பில் ஒரு சுகமும் மகிழ்ச்சியும் இருப்பதைச் சுந்தர் உணர்ந்தான்.

இதுவரை, படிப்பு, கிராம வேளாண்மை வளர்ச்சி இவற்றைப் பற்றிய சிந்தனைகளிலேயே காலம் கழித்து விட்டானே தவிர, தன் சொந்த எதிர்கால வாழ்க்கையைப் பற்றி ஒரு சிறிதும் அவன் நினைத்துக் கூடப் பார்த்ததில்லை.

'வேலைக்குத்தான் போக மாட்டேன்னு சொல்லிட்டே! ஒரு கல்யாணத்தைப் பண்ணிக்கிட்டு எனக்கு ஒரு பேரப்பிள்ளையையாவது. பெத்துக் கொடு!' என்று பாதி கேலியாகவும் பாதி நிஜமான ஆதங்கத்துடனும் அவன் அப்பா அடிக்கடி அவனிடம் சொல்லிக் கொண்டிருந்தார். அவன் அந்தப் பேச்சையெல்லாம் சட்டை செய்ததே இல்லை.

அப்பாவிற்குப் பதில் சொல்ல வேண்டிய நேரம் வந்து விட்டதாக இப்போது அவனுக்குத் தோன்ற ஆரம்பித்திருந்தது.

நிலைக் கண்ணாடி முன் நின்று தலை வாரிக் கொண்டிருந்தான் சுந்தர். அப்பா ராமலிங்கம்பிள்ளை கட்டிலில் உட்கார்ந்து வெற்றிலை போட்டுக் கொண்டிருந்தார்.

"நீ ஊருக்குப் போயிருந்தப்ப உன் மாமா வந்திருந்தார். அம்மா சொன்னாளா?"

''இல்லியே. என்ன விஷயம்?''

சிரத்தையில்லாமல்தான் கேட்டான் அவன்.

''ஒண்ணுமில்லே. கண்ணம்மாவை உனக்குக் கட்டிக் குடுக்கலாம்னு நெனைக்கறார்!''

அவன் பதிலேதும் பேசவில்லை. மௌனமாக வந்து அப்பாவின் முன்னால் பிரம்பு நாற்காலியில் உட்கார்ந்து கொண்டான்.

அப்பாதான் பேசினார்.

''கலியாணப் பேச்சை எடுத்தாலே சுந்தர் சண்டைக்கு வரான். கொஞ்சம் பொறுத்துப் பார்க்கலாம் அப்பமன்னு சொல்லி அவரை அனுப்பி வைச்சேன்.''

''வீணா ஏதும் நம்பிக்கை தரக் கூடாதப்பா...!''

''நீ என்னடா சொல்லறே?''

சுந்தரம் மௌனமாகத் தலைகுனிந்து உட்கார்ந்திருந்தான்.

நகரத்துக் கருத்தரங்கில் தோன்றிய ஊர்மிளா அவன் மனத்தில் மறுபடியும் தோன்றி நகைத்தாள்.

''உன் மனசில என்னதான் நெனைச்சுக் கிட்டிருக்கே சுந்தர்? சொல்லிடேன்.''

கொஞ்ச நேர இடைவெளிக்குப் பிறகு சுந்தர் சொன்னான்.

''இதுவரை இந்த விஷயத்தைப் பத்தி நான் நெனைச்சுக் கூடப் பார்த்தது இல்லை. ஆனா.... இப்ப....''

''சொல்லுடா...!''

''பட்டணத்திலே ஒரு கருத்தரங்குக்குப் போயிருந்தேன் அப்பா. 'ஊரக வளர்ச்சியிலே பட்டதாரி இளைஞர்களின் பங்கு' பற்றிய கருத்தரங்கு. என் லட்சியங்களை அப்படியே ஒரு பேச்சிலே கேட்டேன். நான் நினைக்கிற மாதிரியே நினைக்கிற மனசு.''

''டேய்! நான் எதைப் பத்தியோ பேசினா, நீ வேற எதைப் பத்தியோ பேசறியே...?''

''இல்லையே...'' என்றவன், எழுந்து சென்று அலமாரியில் இருந்த பர்ஸை எடுத்து வந்தான். அதிலிருந்து, ஊர்மிளாவின் விசிட்டிங் கார்டை எடுத்து அப்பாவிடம் கொடுத்தான்.

''அப்படிப் பேசினது இந்தப் பொண்ணுதாம்பா. வாழ்க்கைன்னு அமைஞ்சா இப்படிப்பட்ட பொண்ணோட அமையணும்.''

''நீ சொல்லறதைப் பார்த்தா இவங்க வீட்டிலே போய் உனக்கு நான் பெண் கேட்கலாம்னு தோணறது!''

இதைத்தான் அவன் எதிர்பார்க்கிறானா? அப்பா இதைச் சொல்லும் போது அவன் மனத்துக்கு ஏன் இவ்வளவு இதமாக இருக்கிறது? ஓ! ஊர்மிளா என்ற அந்தப் பெண் அப்படி என்ன மாயப் பொடியைத் தன் பேச்சிலே கலந்து தூவி விட்டாள்?

''என்னடா மௌனமா இருக்கே?''

''ஓ.கே. அப்பா....'' என்று அவசரமாகச் சொல்லி விட்டு நடந்து செல்லும் மகனை வினோதமாகப் பார்த்தார் ராமலிங்கம் பிள்ளை.



''என்னங்க! நம்ம பையன் ஒரு ரூபாயை விழுங்கிட்டான்!''

''போனால் போகுது விடு; டாக்டர் கிட்டே போனால் அவர் குறைந்தபட்சம் இருபது ரூபாயாவது விழுங்கிடுவார்!''

— ஞா. ஞானமுத்து.

சுந்தர் அன்று எங்கும் வெளியில் செல்லவில்லை. பட்டணத்திற்குப் போயிருக்கும் அப்பா, ஊர்மிளாவின் தந்தையைப் பார்த்துப் பேசி விட்டு அன்று காலைதான் வருகிறார்.

கனவுகளில் உழன்று கொண்டிருந்தாலும் நேரம் மிக மிக மெதுவாக நகர்வதாகத்தான் தோன்றியது.

அம்மா சாப்பிடக் கூப்பிட்டாள்.

''அப்பா வரட்டும் அம்மா'', என்று சொல்லி விட்டான்.

அப்பா வந்து விட்டார்.

மனத்தின் பரபரப்பைக் காட்டிக் கொள்ளாமல் அமைதியாக உட்கார்ந்திருந்தான் சுந்தர்.

நடையில் செருப்பைக் கழற்றிப் போட்டு விட்டுச் சோர்வுடன் வந்து கட்டிலில் உட்கார்ந்தார் ராமலிங்கம் பிள்ளை.

''கொஞ்சம் தண்ணி கொண்டா கமலம்...!''

மனைவி கொணர்ந்து கொடுத்த தண்ணீரை வாங்கிக் குடித்து விட்டுத் தம்ளரை அவளிடம் கொடுத்தார்.

''என்னங்க, போன காரியம் என்ன ஆச்சு?''

''ஒண்ணும் ஆகலை. அந்தப் பொண்ணு மேடையிலே பேசின பேச்சைக் கேட்டுச் சுந்தர் ஏமாந்து போயிருக்கிறான்.''

''என்னப்பா சொல்லறீங்க...?''

''உண்மையைத்தாண்டா சொல்லறேன். உன் பேச்சைக் கேட்டுட்டு நான் போனதுக்கு நல்ல பலன் கிடைச்சது. பட்டணத்துப் புத்தியைக் காட்டிட்டாங்க.''

''என்னதான் நடந்தது அப்பா?''

''எனக்குக் கொடுத்த தலைப்பிலே நான் அன்னிக்குப் பேசினேன்; அவ்வளவுதான். அதுதான் என் லட்சியம்னு உங்க பையன் நெனைச்சுக்கிட்டு இப்படியெல்லாம் கனவு காணறது வேடிக்கையாயிருக்கு... அப்பமன்னு சொல்லிட்டுச் சிரிக்கிறது அந்தப் பொண்ணு. அதுதான் அப்பமன்னா அந்தப் பொண்ணோட அப்பா. 'பையன்தான் சொன்னான்னா நீங்க எப்படி ஐயா வந்தீங்க? கொஞ்சம் யோசிச்சிருக்க வேண்டாம்? ஊர்மிளாவாவது கிராமத்திலே விவசாயம் பார்க்கிற உங்க பையனைக் கட்டிக்கிறதாவது?' என்று சொல்லி விட்டுச் சிரிக்கிறார். சே!'' என்று அலுத்துக் கொண்டார் அவர்.







# முழுமையான கிராம வளர்ச்சியே முன்னேற்றமாகும்!

• எதிர்த்து நின்று தோற்றுப் போனவர்களைப் பரம்பரை எதிரிகளாக நினைத்துப் பழிவாங்காமல் அவர்களை அரவணைத்து ஆட்சி நடத்துங்கள்.

• மீண்டும் ஆட்சி அமைக்க வேண்டும் என்ற சுயநலத்தால் சமுதாயத்திற்குப் பயன் படாத திட்டங்களைச் செயல்படுத்தாதீர்கள். எந்தத் திட்டத்தைத் தொடங்கினாலும், குறுகிய காலத்தில், குறைந்த செலவில் நிறைவேற்றுங்கள்.

• ஊழல் செய்பவர்களை ஆதாரத்துடன் யார் சுட்டிக் காட்டினாலும் தகுந்த நடவடிக்கை எடுங்கள்.

— ஆர். ராஜா, கடலூர் — 1.

• நாட்டு மக்களை வீட்டு மக்களாக நினைத்துப் பணியாற்ற வேண்டும்.

• கடமைகளைச் சரியாகக் கவனிக்க முடியாத தருணத்தில் (நோய் அல்லது வேறு காரணங்களால்) தகுதியான மாற்று முதல்வரைத் தேர்ந்தெடுத்து வைத்துக் கொள்ள வேண்டும்.

• இடைத் தேர்தல்களின் போது, எப்படி குறிப்பிட்ட தொகுதி மீது அக்கறை வருகிறதோ, அது போலவே எல்லா நேரங்களிலும் எல்லாத் தொகுதிகளிடமும் அக்கறையோடு செயல்பட வேண்டும்.

— கே. அண்ணாதுரை, அம்மையநாயகனூர்.

• கடந்த நாற்பது ஆண்டுகளாகவே கிராம வளர்ச்சி புறக்கணிக்கப்பட்டு வந்துள்ளது. இருபது அம்ச பொருளாதாரத் திட்டம், ஐ-ஆர்.டி.பி. போன்ற திட்டங்கள் தனி நபர்களுக்குக் கடனுதவி அளிக்க வகை செய்கின்றனவே அன்றி, முழுமையான கிராம வளர்ச்சிக்கு அவை உதவவில்லை. முழு வளர்ச்சியாவது: ஒவ்வொருக்கிராமத்திலும் குடிசைகளை அகற்றி ஓட்டு வில்லை வீடுகளாகத் திருத்தி அமைத்தல், சாலைகளைச் செப்பனிடல், குடிசைத் தொழில்களையும், சிறு தொழில்களையும் ஏராளமாக நிறுவுதல், ஒரு விளையாட்டுத் திடலும் பூங்காவும் அமைத்து அங்கு பொது டீ.வி.யும், வானொலியும் அமைத்துக் கொடுத்தல், வாசக சாலை, ஆரம்ப சுகாதார மருத்துவமனை, அத்தியாவசியமான பொருள்களை விற்பதற்கான கடைகள், குடிநீர்த் தொட்டி, பள்ளிக் கூடம் முதலியன ஏற்படுத்துதல், அருகாமையில் உள்ள நகரத்திற்குச் சென்று வர பஸ் வசதி செய்தல் என்பன. இதனால் கிராம வாழ்க்கை கவர்ச்சிகரமாகி, மக்கள் பட்டணங்களுக்குப் படையெடுப்பது குறைந்து போகும். கிராமப் பொருளாதாரமும் செழிக்கும். பெரு நகரங்களின் விரிவை நிறுத்தி வைத்துச் சிறு நகரங்களும் முறையாக வளர்ச்சி பெற நிதி ஒதுக்கித் திட்டமிட்டுச் செயலாற்ற வேண்டும்.

• பெரிய நகரங்களில் குடிசைப் பிரச்சனைகள் தோன்றியுள்ளன. குடிசை வாழ் மக்களில் 75% பேரைக் கிராமங்களுக்குத் திருப்பி அனுப்பி, அங்கு அவர்களுக்கு வீடுகள் கட்டிக் கொடுத்துக் குடிசைத் தொழில்களில் ஈடுபடுத்த வேண்டும். இதனால் நகரங்களில் நெரிசல்களும், சிக்கல்களும் பெரும் அளவில் தீரும். சுகாதாரம் சீர்படும். 'குடிசை மாற்று வாரியம்' என்ற அமைப்பைக் கலைத்து விட வேண்டும்.

• அரசு அலுவலகங்களின் பிரிவுகள் இருநூறுக்கும் மேல் பெருகியுள்ளன. தேவையற்ற அலுவலகங்களையும், வாரியங்களையும் மூடி விட வேண்டும். சிலவற்றை ஒரே அமைப்பின் கீழ் இணைக்க வேண்டும். மக்கள் அதிகாரிகளை நாட வேண்டிய அவசியங்களைக் குறைத்து விடுவதன் மூலம், ஊழல் வெகுவாகக் குறையும். அலுவலக விதிகளையும், நடைமுறைகளையும், படிவங்களையும் எளிமைப்படுத்தி, அரசு அலுவலகங்கள் தனியார் வர்த்தக அலுவலகங்களின் பாணியில் நடத்தப்பட வகை செய்ய வேண்டும்.

— எஸ். எஸ். நாகராஜன், சென்னை — 88.




## அத்தியாயம் 16
## "மலையமானின் கவலை"

மாளிகைக்கும் மதில் சுவருக்கும் இடையிலிருந்த நிலா முற்றப் பகுதியில் கந்தமாறன் வழி காட்டிக் கொண்டு செல்ல, கரிகாலன் சுற்று முற்றும் பார்த்துக் கொண்டு நடந்தான். மற்ற நால்வரும் பின்தொடர்ந்து சென்றார்கள்.

குரவைக் கூத்துக்காக மேடையும் கொட்டகையும் போட்டிருந்த இடத்தை அடைந்ததும் கரிகாலன் நின்றான்.

"ஓகோ! இது என்ன? இங்கே என்ன நடக்கப் போகிறது?" என்று கேட்டான்.

"கோமகனே! தங்களுக்கு விருப்பமாயிருந்தால், இங்கே குரவைக் கூத்து வைக்கலாம் என்று உத்தேசம்...."

"ஆகா! ரொம்ப நல்லது! குரவைக் கூத்து வையுங்கள். வில்லுப் பாட்டு வையுங்கள். கரிகால் வளவர் நாடகம், விஜயாலய சோழர் நாடகம் எல்லாம் வையுங்கள். பகலெல்லாம் காட்டில் வேட்டையாடுவதில் கழிப்போம். இரவெல்லாம் பாட்டிலும் கூத்திலும் கழிப்போம். சம்புவரையரே! என் பாட்டன் மலையமான் எனக்கு என்ன சொல்லி அனுப்பினான், தெரியுமா! கடம்பூர் சம்புவரையன் மாளிகையில் இருக்கும் போது, 'இரவில் தூங்காதே!' என்று எச்சரிக்கை செய்தான். நான் என் பாட்டனுக்கு என்ன மறுமொழி சொன்னேன், தெரியுமா? 'பாட்டா! நான் பகலிலும் தூங்குவதில்லை; இரவிலும் தூங்குவதில்லை. நான் தூங்கி மூன்று வருஷம் ஆகிறது. ஆகையால் நான் தூங்கும் போது விரோதிகள் எனக்கு ஏதேனும் தீங்கு செய்து விடுவார்கள் என்று பயப்பட வேண்டாம். நான் விழித்துக் கொண்டிருக்கும் போதே யாராவது தீங்கு செய்தால் தான் செய்யலாம். அவ்வளவு துணிச்சலுள்ள ஆண் மகன் யார் இருக்கிறான்?' என்று மலையமானுக்குத் தைரியம் சொல்லி விட்டு வந்தேன்!"

அமரர் கல்கி

என்று கூறி விட்டுக் கரிகாலன் கட கடவென்று சிரித்தான்.

சம்புவரையர் கோபத்தினால் நடுங்கிய குரலில், "ஐயா! தாங்கள் தூங்கினாலும் சரி, விழித்துக் கொண்டிருந்தாலும் சரி.... தங்களுக்கு எவனும்... இந்த மாளிகையில் இருக்கும் போது.... தீங்கு செய்யத் துணிய மாட்டான்!" என்றார்.

"ஆம், ஆம்! கடம்பூர் சம்புவரையர் மாளிகைக்குள் எனக்குத் தீங்கு செய்யக் கூடியவன் யார் இருக்க முடியும்? அல்லது வெளியிலிருந்து இவ்வளவு பெரிய மதில் சுவர்களைத் தாண்டி யார் வர முடியும்? யமன் கூட வர முடியாது. கடம்பூர் சம்புவரையர் என்றால் யமன் கூடப் பயப்படுவானே? அந்தத் திருக்கோவலூர்க் கிழவனாரின் வீண் கவலையைப் பற்றி உங்களுக்குச் சொன்னேன். வயதாகி விட்டதல்லவா? சில பேருக்கு வயதானால் மனோ தைரியம் குறைந்து விடுகிறது. அடுத்தாற் போல், என் பழுவூர்ப் பாட்டனைப் பாருங்கள்! எவ்வளவு மிடுக்காக நடந்து வருகிறார்? அறுபது பிராயத்தைக் கடந்தவர் என்று யாராலாவது சொல்ல முடியுமா?" என்று கூறிச் சிறு நகை செய்தான் கரிகாலன்.

பழுவேட்டரையர் இதற்கு மறு மொழி ஏதேனும் சொல்ல வேண்டும் என்று எண்ணித் தமது தொண்டையைக் கனைத்துக் கொண்டார். அது சிங்க கர்ஜனையைப் போல் முழங்கிற்று.

"பாருங்கள்! பெரிய பழுவேட்டரையர் தொண்டையைக் கனைத்தால் பாரெல்லாம் நடுங்கும் என்று சொல்லுவது எவ்வளவு சரியாயிருக்கிறது? கந்தமாறா! வந்தியத் தேவா! பார்த்திபேந்திரா! நீங்கள் எல்லாம் பழுவூர்ப்பாட்டன் வயதில் இவ்வளவு திடமாக இருப்பீர்களா என்று யோசித்துப் பாருங்கள். ஒருவேளை அவரைப் போல் தொண்டையைக் கனைப்பீர்கள். ஆனால் அவர் வயதில் அந்தப்புரத்துக்குப் புதிய பெண்ணைக் கொண்டு வர மாட்டீர்கள். தாத்தா! தங்களுடன் இளைய ராணியையும் அழைத்து வந்திருக்கிறீர்கள் போலிருக்கிறதே! முன் வாசல் மாடத்தில் பார்த்தேன்! இளைய ராணி எப்படிப் பிரயாணம் செய்து வந்தார்கள்? மூடு பல்லக்கிலா? ரதத்திலா? அல்லது வண்டியிலா?"

பழுவேட்டரையர் அப்போது குறுக்கிட்டு, "யானை மீது அம்பாரியில் வைத்து நாடு நகரமெல்லாம் அறிய அழைத்து வந்தேன்!" என்று பெருமிதத்துடன் கூறினார்.

"அப்படித்தான் செய்ய வேண்டும், தாத்தா! இனிமேல் எப்போதும் அப்படியே செய்யுங்கள்! மூடு பல்லக்கில் மட்டும் அழைத்து வர வேண்டாம். அதனால் பல விரஸமான வதந்திகள் ஏற்படுகின்றன. ஒரு வேடிக்கையைக் கேளுங்கள். பழுவூர் இளைய ராணியின் மூடு பல்லக்கில் சில சமயம் என் சித்தப்பன் மதுராந்தகன் இரகசியமாக ஏறிக் கொண்டு ஊர் ஊராகப் போய் வருகிறானாம்! இப்படி ஒரு வதந்தி நாடெங்கும் பரவியிருக்கிறது!" என்று கரிகாலன் கூறி இடி இடியென்று சிரித்தான்.

ஆனால் அங்கிருந்த மற்றவர்கள் யாரும் சிரிக்கவில்லை, ஒவ்வொருவர் மனத்திலும் ஒவ்வொரு விதக் கலக்கம் ஏற்பட்டது.

வந்தியத் தேவன் தன் மனத்திற்குள் "ஐயோ! எப்பேர்ப்பட்ட தவறு செய்து விட்டோம்! இந்த வெறி பிடித்த மனிதரிடம் எல்லாவற்றையும் சொல்லி விட்டோமே! ஒன்றையும் மிச்சம் வைத்துக் கொள்ளாமல் பகிரங்கப்படுத்தி விடுவார் போலிருக்கிறதே!" என்று எண்ணிக் கலங்கினான்.

பெரிய பழுவேட்டரையரின் உள்ளம் எரிமலையின் உட் பிரதேசத்தைப் போல் தீயும் புகையுமாகக் குழம்பிக் கொதித்துக் கனன்றது. தீயும் புகையும் எரிமலை வாயின் வழியாக வருவதற்கு முன்னால் உண்டாகும் பயங்கர உறுமலைப் போல் அவர் மீண்டும் தொண்டையைக் கனைத்துக் கொண்டார்.

அவர் பேசுவதற்கு முன் பார்த்திபேந்திரன் ஓர் அடி முன்னால் பெயர்ந்து வந்து, "கோமகனே! பழுவூர் இளையராணியை நான் வெகு சிறிய காலந்தான் பார்த்துப் பழக நேர்ந்தது. அதற்குள்ளேயே அவர்

எத்தகைய பத்தினித் தெய்வம் என்பதை அறிந்து கொண்டேன். பழுவூர் ராணியைப் பற்றி யாரேனும் அவதூறு கூற முற்பட்டால் அவனை அந்தக் கணமே என் வாளுக்கு இரையாக்குவேன்! இது சத்தியம்!'' என்று சொன்னான்.

கந்தமாறன் பின்னால் ஒரு அடி வந்து நின்று, ''என் கையில் கத்தி எடுக்க வேண்டிய அவசியமே இல்லை. பழுவூர் இளைய ராணியைப் பற்றி அவதூறு கூறுகிறவனை என் கையினாலேயே கழுத்தை நெரித்துக் கொன்று விடுவேன். இது சத்தியம்!'' என்றான்.

இதைக் கேட்ட வந்தியத் தேவனும் ஒரு அடி முன் வந்து, ''நானும் அப்படித்தான்! பழுவூர் ராணியைப் பற்றி யாரேனும் தவறாகப் பேசினால், என் கண் பார்வையினாலேயே அவனைச் சுட்டெரித்து விடுவேன்!'' என்றான்.

''ஆஹாஹா! கொஞ்சம் பொறுங்கள், நண்பர்களே! என்னிடமே சண்டைக்கு வந்து விடுவீர்கள் போலிருக்கிறதே! பார்த்தீர்களா, தாத்தா! தமிழ்ப் பெண் குலத்தின் கௌரவத்தைக் காப்பாற்றுவதில் இவர்கள் எவ்வளவு துடிப்புடன் இருக்கிறார்கள்? ஆனால் பழுவூர் இளைய ராணியைப் பற்றி யாரும் அவதூறு சொல்லவில்லை. சொன்னால், நானும் கேட்டுக் கொண்டு சும்மா இருக்க மாட்டேன். இந்த வீராதி வீரர்கள் வரும் வரையில் அப்படி அவதூறு சொன்னவனை நான் உயிரோடு வைத்திருக்க மாட்டேன். பழுவூர் இளைய ராணியின் மூடு பல்லக்கைப் பற்றித்தான் குறை சொல்லுகிறார்கள்! அந்தக் கோழை மதுராந்தகன் பழுவூர் ராணியின் மூடு பல்லக்கில் ஊர் ஊராக இரகசியப் பிரயாணம் செய்கிறானாம்! எப்போது ஆண் மகன் ஒருவன் மூடு பல்லக்கில் இரண்டு பக்கத்திலும் திரை விட்டுக் கொண்டு பிரயாணம் செய்கிறானோ, அப்போது இளைய ராணியும் அப்படிப் பிரயாணம் செய்தால் சில அனர்த்தங்கள் விளையக் கூடும் அல்லவா?....''

''கோமகனே! பராந்தக சக்கரவர்த்தியின் பேரனும் கண்டராதித்தருடைய திருமகனுமான மதுராந்தகத் தேவர் எதற்காக மூடு பல்லக்கில் பிரயாணம் செய்ய வேண்டுமாம்? எனக்கு ஒன்றும் விளங்கவில்லையே?'' என்றான் பார்த்திபேந்திர பல்லவன்.

''அதன் காரணமும் ஒரு வேடிக்கையான காரணந்தான்! மதுராந்தகன் மூடு பல்லக்கில் ஏறிக் கொண்டு ஊர் ஊராகப் போய்த் தன் கட்சிக்குப் பலம் திரட்டிக் கொண்டு வருகிறானாம்!.....''

''எதற்காகப் பலம் திரட்டுகிறது?''

''எதற்காகவா? என் தகப்பனாருக்குப் பிறகு சோழ ராஜ்ய சிம்மாசனத்தில் அவன் ஏறுவதற்காகத் தான்! எப்படியிருக்கிறது கதை? சில மாதங்களுக்கு முன்பு ஒருநாள் இந்தக் கடம்பூர் மாளிகைக்குக் கூட அவன் அப்படி மூடு பல்லக்கில் இரகசியமாக வந்திருந்தானாம். நள்ளிரவில் சதியாலோசனைக் கூட்டம் ஒன்று இங்கே நடந்ததாம். பார்த்திபேந்திரா! திருக்கோவலூர்க் கிழவனார் நீயும் என்னுடன் இருந்த போது தானே இதையெல்லாம் சொன்னார்? மதுராந்தகனுக்குச் சிம்மாசனம் ஏறுவதற்கு உள்ள ஆர்வத்தினால் அவசரப்பட்டு என் தந்தையைக் கொஞ்சம் சீக்கிரமாகவே சொர்க்கத்துக்கு அனுப்பினாலும் அனுப்பி விடுவான் என்று சொன்னாரே? அதெல்லாம் உனக்கு நினைவில்லையா?''

''நினைவுக்கு வருகிறது, இளவரசே! அதையெல்லாம் அப்போதும் நான் நம்பவில்லை. இப்போதோ, சிறிது கூட நம்பவில்லை. தஞ்சாவூருக்குப் போய்த் தங்கள் தந்தையை நேரில் தரிசித்து விட்டு வந்த பிறகு...''

''நீ மட்டும் என்ன? நானுங் கூடத் தான் நம்பவில்லை. நம்பியிருந்தால் இந்தக் கடம்பூர் மாளிகைக்கு விருந்தாளியாக வந்திருப்பேனா?'' என்று கூறிக் கரிகாலன் மீண்டும் எதையோ நினைத்துக் கொண்டவன் போல் சிரித்தான்.

கடம்பூர் சம்புவரையர் தொண்டையைக் கனைத்துக் கொண்டு, ''கோமகனே! திருக்கோவலூர்



மலையமான் குலத்துக்கும் எங்கள் குலத்துக்கும் நீண்ட கால விரோதம் என்பது தங்களுக்குத் தெரிந்திருக்கும்!'' என்றார்.

''தெரியாமல் என்ன? அந்த விரோதத்தைப் பற்றிச் சங்கப் புலவர்கள் பாடியிருக்கிறார்களே? கொல்லி மலை வல் வில் ஓரியை மலையமான் திருமுடிக்காரி சண்டையில் கொன்றான். வல் வில் ஓரியின் வம்சத்தில் நீங்கள் வந்தவர்கள். ஆகையால் அந்த விரோதத்தை இன்னமும் வைத்துக் கொண்டிருக்கிறீர்கள்....''

''கோமகனே! வல் வில் ஓரியின் சாவுக்கு உடனே பழி வாங்கப்பட்டது. வல் வில் ஓரியின் உறவினனாகிய அதியமான் நெடுமானஞ்சி திருக்கோவலூர் மீது படையெடுத்துச் சென்று அந்த ஊரையும் அழித்தான்; மலையமானுடைய முள்ளூர் மலைக் கோட்டையையும் தரைமட்டமாக்கினான்.....''

''சம்புவரையரே! அதியமான் மட்டும் தனியாக அந்தக் காரியத்தைச் செய்து விடவில்லை. என் முன்னோனாகிய சோழன் கிள்ளி வளவனுடைய உதவியைக் கொண்டுதான் மலையமான் மீது அதியமான் வெற்றி அடைந்தான். அந்தப் பழைய கதையெல்லாம் இப்போது எதற்கு?....''

''நாங்கள் மறந்து விட்டாலும், மலையமான் மறப்பதில்லை. ஏதாவது எங்கள் பேரில் அவன் குற்றம் சாட்டிக் கொண்டிருக்கிறான்....''

''நான்தான் சொன்னேனே? கிழவருக்கு வயதாகி விட்டது; ஆகையால் புத்தியும் தடுமாறுகிறது. நான் இங்கே இருக்கும்போது எனக்கு ஆபத்து ஒன்றும் வராமல் பாதுகாப்பதற்காக அவன் ஒரு பெரும் சைன்யத்தைத் திரட்டிக் கொண்டு வராமல் இருக்க வேண்டுமே என்று கூட எனக்குக் கொஞ்சம் கவலையாயிருக்கிறது...''

''இளவரசே! அப்படி ஏதேனும் தங்களுக்குச் சந்தேகம் இருந்தால்....'' என்று சம்புவரையர் தடுமாறினார்.

''எனக்குச் சந்தேகமா? இல்லவே இல்லை. மலையமானோடு எங்கள் உறவு இரண்டு தலைமுறையாகத்தான். பழுவேட்டரையரோடு எங்கள் உறவு ஆறு தலைமுறையாகத் தொடர்ந்து வந்திருக்கிறது. பழுவூர் அரசரே இங்கே வந்திருக்கிறார். அவர் சோழ குலத்துக்கு விரோதமாக ஏதும் செய்வார் என்று நினைக்க எனக்குப் பைத்தியம் பிடித்திருக்கிறதா?'' என்று கரிகாலன் கூறிப் பைத்தியச் சிரிப்புச் சிரித்தான்.

பழுவேட்டரையர் கம்பீரமான குரலில் ''இளவரசே! சோழ குலத்துக்கு விரோதமாக நான் எதுவும் செய்யமாட்டேன்; இது சத்தியம். தர்ம நியாயத்துக்கு விரோதமாகவும் எதுவும் எப்பொழுதும் செய்யமாட்டேன். இது இருமடங்கு சத்தியம்!'' என்றார்.

''ஆமாம், ஆமாம்! தர்ம நியாயம் என்பதாக ஒன்று இருக்கத்தான் இருக்கிறது. அதைப் பற்றித் தங்களிடம் பேசித் தெரிந்து கொள்ளத்தான் வந்தேன். வேட்டையாடும் நேரமும்,



கூத்துப் பார்க்கும் நேரமும் போக ஒழிந்த நேரத்தில் சற்று தர்ம நியாயத்தையும் பற்றிப் பேசலாம்! சம்புவரையரே! இந்தப் பிரம்மாண்டமான அரண்மனையில் நானும் என் சிநேகிதர்களும் தங்குவதற்கு எந்த இடத்தை ஏற்படுத்தியிருக்கிறீர்கள்?'' என்று கேட்டான் கரிகாலன்.

''ஐயா! தங்களுக்கும் பழுவூர் மன்னருக்கும் பின்கட்டில் விருந்தினர் விடுதி முழுவதையும் ஒதுக்கி விட்டிருக்கிறோம். மற்றபடி வரக்கூடிய சிற்றரசர்களை யெல்லாம் என்னோடு முன்கட்டிலேயே வைத்துக் கொள்வேன்.....''

''ஓகோ! இன்னும் சிற்றரசர்களும் வரப் போகிறார்களா?''

''ஆம்; இளவரசே! தங்களை இங்கே சந்திப்பதற்குச் சுற்றுப்புறமுள்ள குறுநில மன்னர்கள் எல்லாரும் ஆவலாயிருக்கிறார்கள். பலரும் வருவார்கள்.''

''வரட்டும்; வரட்டும்! எல்லாரும் வரட்டும்! ரொம்ப நல்லது. யோசித்து முடிவு செய்ய வேண்டியதை ஒரு வழியாக முடிவு செய்து விடலாம். மதுராந்தகனுடைய சதியாலோசனை ஒருபுறம் இருக்கட்டும். நானே உங்களுடன் சேர்ந்து ஒரு சதியாலோசனை செய்ய விரும்புகிறேன். அதற்கு இந்த மாளிகையைக் காட்டிலும் தகுந்த இடம் கிடைக்காது!'' என்றான் கரிகாலன்.

## அத்தியாயம் 17

# பூங்குழலியின் ஆசை

நாகைப் பட்டினத்திலிருந்து கோடிக்கரை வரையில் சென்ற ஓடையில் பூங்குழலியின் படகு போய்க் கொண்டிருந்தது. பூங்குழலியோடு சேந்தன் அமுதனும் அப் படகில் இருந்தான். படகு கோடிக்கரையை நெருங்கிக் கொண்டிருந்தது.

ஓடைக் கரையில் தங்க நிறத் தாழம் பூக்கள் மடல் விரித்து மணத்தை அள்ளி எங்கும் வீசிக் கொண்டிருந்தன.

ஒரு தாழம்பூவின் மீது பச்சைக் கிளி ஒன்று பறந்து வந்து உட்கார்ந்தது. அது உட்கார்ந்த வேகத்தில் தாழம்பூ ஊஞ்சல் ஆடுவது போல் ஆடியது. பச்சைக் கிளியும் அத்துடன் ஆடி விட்டுப் பிறகு அதன் தங்க நிற மடலைத் தன் பவள நிற மூக்கினால் கொத்தியது.

படகு நெருங்கியதும், பச்சைக் கிளி 'கிக்கி' 'கிக்கி' என்று கத்திக் கொண்டு பறந்தோடி விட்டது.

"பிறந்தால் பச்சைக் கிளியாகப் பிறக்க வேண்டும்!" என்றாள் பூங்குழலி.

"நீ அவ்விதம் எண்ணுகிறாய்! அதற்கு எத்தனை கவலையோ, எவ்வளவு கஷ்டமோ, யார் கண்டது?" என்றான் சேந்தன் அமுதன்.

"என்ன கவலை, கஷ்டம் இருந்தாலும், இஷ்டம் போல் எல்லையற்ற வானத்தில் பறந்து செல்ல முடிகிறதல்லவா? அதைக் காட்டிலும் இன்பம் வேறு உண்டா?" என்றாள் பூங்குழலி.

"அப்படிப் பறந்து திரியும் பச்சைக் கிளியைச் சிலர் பிடித்துக் கூண்டில் அடைத்து விடுகிறார்களே!" என்றான் சேந்தன் அமுதன்.

"ஆமாம், ஆமாம்! அரண்மனைகளில் வாழும் இராஜ குமாரிகள் பச்சைக் கிளிகளைக் கூண்டுக்குள் அடைத்து வைக்கிறார்கள்! குரூர ராட்சஸிகள்! கிளிகளைக் கூண்டில் அடைத்து விட்டு அவற்றுடன் கொஞ்சி விளையாடுகிறார்கள்! நான் மட்டும் ஏதேனும் ஓர் அரண்மனையில் சேடிப் பெண்ணாயிருந்தால், கூண்டில் அடைபட்ட கிளிகளுக்கு விஷம் வைத்துக் கொன்று விடுவேன். கிளிகளைப் பிடித்துக் கூண்டில் அடைக்கும் இராஜ குமாரிகளுக்கும் விஷத்தைக் கொடுத்து விடுவேன்....."

"நீ இப்போது பேசுவதைக் கேட்டால், உன்னையும் குரூர ராட்சஸி என்றுதான் சொல்லுவார்கள்."

"சொன்னால் சொல்லட்டும்! நான் ராட்சஸியாயிருந்தாலும் இருப்பேன்; இராஜ குமாரியாயிருக்க மாட்டேன்."

"இராஜ குமாரிகளின் மீது உனக்கு ஏன் இத்தனை கோபம், பூங்குழலி! பார்க்கப் போனால், அவர்கள் பேரிலும் பரிதாபப்பட வேண்டியதல்லவா? கூண்டில் அடைபட்ட பச்சைக் கிளிகளைப் போலத்தான் அவர்களும் அரண்மனைக்குள் அடைபட்டுக் காலங் கழிக்க வேண்டியிருக்கிறது. தப்பித் தவறி அவர்கள் வெளியில் புறப்பட்டால், எத்தனை கட்டுக் காவல்? எத்தனை இரகசியம்? எத்தனை ஜாக்கிரதை? உன்னைப் போல் அவர்கள் படகில் ஏறிக் கொண்டு, தன்னந் தனியாக ஓடையிலும் கடலிலும் போக முடியுமா? இஷ்டப்படி துள்ளித் திரியும் மானைப் போல் காட்டில் சுற்றி அலைய முடியுமா?"

"அவர்களை யார் அடைந்து கிடக்கச் சொல்கிறார்கள்? நான் சொல்லவில்லையே? இஷ்டமிருந்தால் அவர்களும் காட்டில் அலைந்து திரிவதுதானே?"

"இஷ்டம் மட்டும் போதாது. அவரவர்களுடைய பிறப்பு வளர்ப்

யையும் பொறுத்தது. கிளியைப் போல் நீயும் வானத்தில் பறக்க விரும்புகிறாய். அது முடிகிற காரியமா? கடற்கரையில் நீ பிறந்து வளர்ந்தாய். அதனால் இவ்வளவு சுயேட்சையாக இருக்க முடிகிறது. அரண்மனையில் பிறந்து வளர்ந்தவர்களால் அது முடியாது. இன்னும் ஒரு விசித்திரத்தைக் கேள். சில நாள் கூண்டில் அடைபட்டு இராஜ குமாரிகளின் கையினால் உணவு அருந்திப் பழக்கப்பட்ட கிளிகள் பிறகு கூண்டைத் திறந்து விட்டாலும் ஓடிப் போகவே விரும்புவதில்லை. சிறிது தூரம் பறந்து வட்டமிட்டு விட்டு, பிறகு 'கிறீச்' 'கிறீச்' என்று கத்திக் கொண்டு கூண்டுக்குத் திரும்பி வந்து விடும். தஞ்சையிலும் பழையாறையிலும் உள்ள அரண்மனைகளில் இதை நானே நேரில் பார்த்திருக்கிறேன்.....''

''அவ்விதம் கூண்டில் அடைபடுவதற்கு நான் ஒரு நாளும் சம்மதிக்க மாட்டேன். நான் கிளியாயிருந்தால் சொல்கிறேன். என்னைக் கூண்டில் அடைத்து வைத்து அமுதூட்ட வரும் இராஜகுமாரியின் கையை வெடுக்கென்று கடித்து விடுவேன்...''

''கூண்டில் அடைபட்ட கிளியாயிருக்கவும் நீ விரும்ப மாட்டாய். அரண்மனையில் அடைபட்ட அரசிளங் குமரியாயிருக்கவும் நீ விரும்ப மாட்டாயல்லவா?''

''மாட்டவே மாட்டேன். அதைக் காட்டிலும் விஷந்தின்று உயிரை விட்டு விடுவேன்!''

''அதுதான் சரி! அப்படியானால் அரண்மனையில் வாழும் இராஜ குமாரனைக் கலியாணம் செய்து கொள்ளவும் நீ ஆசைப்படக் கூடாது!''

கீழ் வானத்தில் கருமேகங்கள் திரண்டு கொண்டிருந்தன. அவ்வப் போது பளீர் பளீர் என்று மின்னல்கள் மின்னிக் கொண்டிருந்தன. இடியின் குமுறல் இலேசாகக் கேட்டுக் கொண்டிருந்தது.

சேந்தன் அமுதன் கடைசியாகச் சொன்னதைக் கேட்டதும் பூங்குழலியின் கண்களிலிருந்து பளீர் என்று



## அருள்வாக்கு

மநு முதலான மகா பெரியவர்கள் ஸகல மக்களுக்கும் அஹிம்சை, சத்யம், திருடாமை, தூய்மை, புலனடக்கம் என்ற ஐந்து உயர்ந்த பண்புகள் இருக்க வேண்டுமென்று சொல்லியிருக்கிறார்கள். இந்த ஐந்தையும் நாசம் பண்ணுவதாக ஆசை என்பது இருக்கிறது.

ஹிம்சை ஏன் செய்கிறோம்? மாம்ஸத்தில் உள்ள ஆசையினால். இன்னொருத்தனிடமுள்ள ஒரு பொருளில் நமக்கு ஏற்படும் ஆசையால் அவனை ஹிம்சித்தாவது அதைப் பெறப் பார்க்கிறோம்.

ஸத்யத்தை ஏன் விடுகிறோம்? ஆசை வைத்த எதையோ ஸத்யமான முறையில் போய் அடைய முடியாது என்பதால்தான் இப்படிச் செய்கிறோம். நம்மைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும்; நம்முடைய ஸொத்து, நம்முடைய அந்தஸ்து, மானம் போன்ற எதுவோ ஒன்றைக் காப்பாற்றிக் கொள்ள வேண்டும் என்ற ஆசைக்காகத் தான் பேசுகிற பொய்யெல்லாம்; பண்ணுகிற மோசடியெல்லாம்.

பொருளிடத்திலுள்ள ஆசையால்தான் திருடுவது என்பதை விளக்க வேண்டிய அவசியமில்லை.

ஆசார சுத்தியை விட்டுவிடுவது, 'மனஸ் போனபடி ஸௌகர்யங்களை அனுபவிக்க வேண்டும்' என்ற ஆசையினால்தான்.

புலனடக்கம் போவது ஆசையால்தான் என்பதைச் சொல்ல வேண்டாம்.

அதாவது மநு சொன்ன ஐந்து பெரிய தர்மங்களையும் மீறப் பண்ணுவது ஆசை தான்.

அதனாலேதான் மற்றப் பற்றுகள் (ஆசைகள்) விடுவதற்காகப் பரமாத்மா ஒருவனிடம் மாத்திரம் பற்று (ஆசை) வையுங்கள் என்று,

பற்றுக பற்றற்றான் பற்றினை
— அப்பற்றைப்
பற்றுக பற்று விடற்கு.

என்று திருவள்ளுவர் சொன்னார்.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

மின்னல் கற்றைகள் புறப்பட்டன.

''நான் இராஜ குமாரனைக் கலியாணம் செய்து கொள்ள ஆசைப் படுவதாக உனக்கு யார் சொன்னது?'' என்று கோபமாகக் கேட்டாள்.

''எனக்கு யாரும் சொல்லவில்லை. நானாகத்தான் சொன்னேன். உன் மனத்தில் அத்தகைய ஆசை இல்லாவிட்டால் நல்லதாய்ப் போயிற்று. நான் சொன்னதை மறந்து விடு!'' என்றான் சேந்தன் அமுதன்.

சற்று நேரம் அந்தப் படகில் மௌனம் குடிகொண்டிருந்தது. சேந்தன் அமுதன் துடுப்பினால் படகு தள்ளும் சத்தமும், வறட்டுத் தவளைகளின் குரலும், கடற் பறவைகளின் ஒலியும், கடல் அலைகளின் ஓசையும், அவ்வப் போது கீழ்த் திசையில் இடி முழக்கமும் கேட்டுக் கொண்டிருந்தன.

சேந்தன் அமுதன் தொண்டையைக் கனைத்துக் கொண்டு மனத்தையும் தைரியப்படுத்திக் கொண்டு ''பூங்குழலி! என் அந்தரங்கத்தை வந்தியத் தேவன் உன்னிடம் வெளியிட்டதாகக் கூறினாய் அல்லவா? அதைப் பற்றி உன் கருத்தைத் தெரிவித்தால் நல்லது. அதோ கோடிக்கரையின் கலங்கரை விளக்கம் தெரிகிறது. இனி உன்னோடு தனியாகப் பேசும் சந்தர்ப்பம் கிட்டாமற் போகலாம். நாளை நானும் புறப்பட்டுச் செல்ல வேண்டும். தஞ்சையில் என் தாயாரைத் தனியாக விட்டு வந்து வெகு நாளாகிறது!'' என்றான்.

''வந்தியத்தேவன் உனக்காக ஏன் தூது சொல்ல வேண்டும்? உனக்கு வாய் இல்லையா? கேட்க வேண்டியதை நேரில் கேட்டு விடேன்!'' என்றாள் பூங்குழலி.

''சரி! கேட்கிறேன். நீ என்னைக் கலியாணம் செய்து கொள்வாயா?'' என்று சேந்தன் அமுதன் கேட்டான்.

''எதற்காக என்னைக் கலியாணம் செய்து கொள்ளும்படி கேட்கிறாய்?'' என்றாள் பூங்குழலி.

''உன் பேரில் எனக்கு அந்தரங்கமான ஆசை இருக்கிறது. அதனாலேதான்!''

''அந்தரங்கமான ஆசையிருந்தால் கலியாணம் செய்து கொண்டுதான் தீர வேண்டுமா?''

''அப்படியொன்றும் 'தீரவேண்டும்' என்பதில்லை. உலக வழக்கம் அப்படி இருந்து வருகிறது....''

''உன்னைக் கலியாணம் செய்து கொண்டால் எனக்கு நீ என்ன தருவாய்? நான் வேண்டும் அரண்மனை வாழ்வும் ஆடை ஆபரணங்களும் யானை குதிரைகளும் பல்லக்கு பணிப் பெண்களும் உன்னால் தர முடியுமா?''

''முடியாது; அவற்றுக்கெல்லாம் மேலான அமைதியுள்ள வாழ்க்கையைத் தருவேன். கேள், பூங்குழலி! தஞ்சை நகர்ப் புறத்தில் அழகான பூந்தோட்டத்தின் மத்தியில் என் குடிசை இருக்கிறது. அதில் என் அன்னையும் நானுந்தான் வசிக்கிறோம். நீ அங்கு வந்து விட்டாயானால், உன் வாழ்க்கையே மாறுதல் அடைந்து விடும். என் அன்னை உன்னை அன்போடு வைத்து ஆதரித்துப் பாதுகாப்பாள். பொழுது விடிந்ததும் எழுந்திருந்து நம் வீட்டைச் சுற்றியுள்ள கொடிகளிலும் மரங்களிலும் குலுங்கும் மலர்களை இருவரும் சேர்ந்து சித்திர விசித்திரமான மாலைகளாகக் கட்டலாம். மாலைகளை நான் தஞ்சைத் தளிக் குளத்தார் ஆலயத்துக்கும் துர்க்கா பரமேசுவரியின் ஆலயத்துக்கும் கொண்டு போய்க் கொடுத்து விட்டு வருவேன். அதற்குள் நீ எங்கள் தோட்டத்திலுள்ள தாமரைக் குளத்தில் குளித்து விட்டு என் அன்னைக்கு வீட்டு வேலைகளில் உதவி செய்யலாம். மாலை நேரங்களில் நாம் மூவரும் தாமரைக் குளத்தில் தண்ணீர் மொண்டு கொண்டு போய்ப் பூச் செடிகளுக்கு ஊற்றலாம். மாலை ஆனதும் நான் உனக்கு அமுதினும் இனிய தெய்வத் தமிழ்ப் பதிகங்களைச் சொல்லிக் கொடுப்பேன். உன்னுடைய மதுரமான குரலில் அவற்றைப் பாடினால், பாடிய உன் நாவும் இனிக்கும்; கேட்கும் என் காதும் இனிக்கும். நமக்கு விருப்பம் இருந்தால் ஆலயங்களுக்குச் சென்று இறைவனைத் தரிசித்து விட்டு அத் தெய்வப் பாடல்களைப் பாடி விட்டு வரலாம். கோயிலுக்கு வரும் பக்தர்களும் கேட்டு மகிழ்வார்கள்

பூங்குழலி! இதைக் காட்டிலும் இனிய வாழ்க்கை, மகிழ்ச்சி அளிக்கும் வாழ்க்கை உலகில் வேறு என்ன இருக்க முடியும்? யோசித்துப் பார்த்துச் சொல்லு!''

இவ்விதம் சேந்தன் அமுதன் கூறியதையெல்லாம் கேட்டு விட்டுப் பூங்குழலி கலகலவென்று சிரித்தாள்.





"அமுதா! நீ இனியதென்று கருதும் வாழ்க்கையைப் பற்றிச் சொன்னாய்! ஆனால் நான் எத்தகைய வாழ்க்கை வேண்டுமென்று ஆசைப்படுகிறேன், தெரியுமா? வானுலகத்துக்குச் சென்று தேவேந்திரனை மணந்து கொள்ள ஆசைப்படுகிறேன். தேவேந்திரனுடன் ஐராவதத்தில் ஏறி வானத்தில் மேக மண்டலங்களுக்கு மத்தியில் பிரயாணம் செய்ய விரும்புகிறேன். தேவேந்திரனுடைய கையிலிருந்து வஜ்ராயுதத்தைப் பிடுங்கி மேகக் கூட்டங்களின் மீது பிரயோகிக்க ஆசைப்படுகிறேன். வஜ்ராயுதத்தினால் தாக்கப்படும் போது அந்தக் கரிய மேகங்களிலிருந்து ஆயிரம் பதினாயிரம் மின்னல்கள் கற்றை கற்றையாகக் கிளம்பி வான மண்டலத்தைச் சுக்கு நூறாகப் பிளப்பதைப் பார்க்க ஆசைப்படுகிறேன். இப்போதெல்லாம் வானத்திலிருந்து இடி விழுந்தால் எங்கேயோ கடலில் அல்லது காட்டில் விழுந்து மறைந்து விடுகிறதல்லவா? நான் அப்படி இடிகளை வீணாக்க மாட்டேன். அரசர்களும் அரசிகளும் இராஜகுமாரர்களும் இராஜகுமாரிகளும் வாழும் அரண்மனைகளாகப் பார்த்து அவற்றின் மேலே இடிகளைப் போடுவேன். அந்த அரண்மனைகள் இடிந்து விழுந்து மண்ணோடு மண்ணாவதைப் பார்த்துக் களிப்பேன். தேவேந்திரன் ஒருவேளை என்னை மணந்து கொள்ள இஷ்டப்படா விட்டால் வாயு தேவனிடம் செல்வேன். அவனுக்கு ஏற்கெனவே பல மனைவிகள் இருந்தாலும் பாதகம் இல்லையென்று என்னை மணந்து கொள்ளச் சொல்லுவேன். அவ்வளவுதான். பிறகு இந்த உலகத்தில் எப்போதும் புயற்காற்றும் சுழிக் காற்றும் சண்டமாருதமும் அடித்துக் கொண்டேயிருக்கும். பெரிய பெரிய மரங்கள் பெயர்ந்து மாட மாளிகைகளின் மீது விழுந்து அவற்றை அழிக்கும். கடலில் போகும் மரக்கலங்கள் சண்டமாருதத்தினால் தாக்குண்டு துகள் துகளாகச் சிதறிப் போகும். அந்தக் கப்பல்களில் பிரயாணம் செய்வோர் கொந்தளிக்கும் கடலில் விழுந்து தவிப்பார்கள். அவர்களில் இராஜ குமாரர்களும் இராஜ குமாரிகளும் இருந்தால் அவர்கள் ஆழ்கடலின் அடிவாரத்துக்குப் போகட்டும் என்று விட்டு விட்டு, மற்றவர்களை மட்டும் போனால் போகிறதென்று தப்ப வைப்பேன். வாயுதேவனும் ஒருவேளை என்னை மணந்து கொள்ள மறுத்தால் அக்கினி தேவனிடம் செல்வேன். அப்புறம் கேட்க வேண்டுமா? இந்த உலகமே தீப்பற்றி எரிய வேண்டியதுதான்!..."

"பூங்குழலி! போதும்! நிறுத்து! ஏதோ ஒரு மனக் கசப்பினால் இவ்விதமெல்லாம் நீ பேசுகிறாய். மனமறிந்து யோசித்துப் பேசவில்லை. உன் மனநிலையை அறிந்து கொள்ளாமல் உன்னிடம் நான் கலியாணப் பேச்சை எடுத்ததே என் தவறுதான். அதற்காக என்னை மன்னித்து விடு! கடவுள்தான் உன்னுடைய மனக் கசப்பைப் போக்கி அமைதி அளித்து அருள வேண்டும். அதற்காக நான் அல்லும் பகலும் பிரார்த்தனை செய்து வருவேன்!" என்றான்.

உட்கார்ந்திருந்த பூங்குழலி திடீரென்று எழுந்து நின்றாள். ஓடைக் கரையில் இருந்த ஒரு மரத்தின் பக்கமாக உற்றுப் பார்த்தாள். சேந்தன் அமுதனும் அந்தத் திசையை நோக்கினான். மரக்கிளைகளின் மத்தியில் ஒரு பெண்மணியின் முகம் தெரிந்தது. சேந்தன் அமுதன் ஒருகணம் அங்கே நின்றவளின் முகத்தில் தன் அன்னையின் முகச் சாயலைக் கண்டு திகைத்துப் போனான்.

பின்னர், அவள் தன் அன்னை இல்லையென்பதை அறிந்து கொண்டான். பூதத் தீவில் வசிப்பதாகப் பூங்குழலி கூறிய தன் பெரியம்மாவாக இருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொண்டான்.

பூங்குழலி படகிலிருந்து தாவி ஓடைக் கரையில் குதித்து அந்தப் பெண்மணியை நோக்கி விரைந்து ஓடினாள்.

(தொடரும்)

# காதல் கொள்ளை

லோகத்திலே அதிர்ஷ்டம்கிறது எத்தனையோ வகை உண்டு. பணக்கார அத்தை தன் சொத்தை உங்க பேருக்கு எழுதி வச்சிட்டு மண்டையைப் போட்டிருக்கலாம்; சில்லறைக்குப் பதிலா கொடுத்த லாட்டரிச் சீட்டிலே ஏழு லட்சம் பரிசு கிடைக்கலாம்; சீட்டு நாட்டில்லாம உங்க பெரியவாளண்டை வாங்கின கடனை இன்னிக்குக் கோடீசுவரானா இருக்கிறவா மனச்சாட்சி குத்தினதாச் சொல்லி வட்டியும் முதலுமாத் திருப்பிக் கொண்டு வந்து உங்களண்டை ஒப்படைக்கலாம்.

ஆனால் பாருங்கோ, உங்களிலே யாரும் இதுவரைக்கும் கேள்விப்பட்டிராத ஓர் அதிசயமான அதிர்ஷ்டம் நம்ம கதாநாயகன் ராம் குமாருக்கு அடிச்சதாம்.

ராம்குமார் நம்ம பக்கத்துப் பிள்ளையாண்டான்தான். பி.ஈ. படிச்சுட்டு ஏ.ஈயா இருக்கான். இப்பத்தான் ஆறு மாசத்துக்கு முன்னாடி டிரான்ஸ்பர் ஆகி நாகார்ஜுனா புராஜக்டிலே வேலை பார்க்கிறான். கல்யாணம் ஆயிட்டது. இன்னும் பெத்துக்கலை. அத்துவானக் காலனியிலே குவார்ட்டர்ஸ்.

அவனோட சம்சாரத்துக்குத் துணையா அவனோட தங்கையும் அவாளோட இருக்கா. தங்கை சாயா காலேஜ்லே படிச்சவ. தைரியசாலிதான். மன்னி மங்களாவுக்கு இவ தைரியம் சொல்லுவா.

இருந்தாலும் ரெண்டும் பொம்மனாட்டிகள்தானே? ராம்குமார் ஆபீஸ் போயிட்டா, ரெண்டும் கதவைப் பூட்டிண்டு குறுகுறுன்னு அடைஞ்சு கிடக்கும்.

அந்தப் பக்கத்திலே முகமூடித் திருடன், வடக்கத்திக் கொள்ளைக்காரன் பிரவேசங்களைப் பத்தி அப்பப்ப பேப்பர்லே படிக்கறச்சே, 'ஏன்னா, மேலே எடுத்துச் சொல்லுங்கோ; எழுதிப் போடுங்கோ நம்ம ஊர் பக்கமே மாத்திண்டு போயிடலாமே'ன்னு மங்களா பர்த்தாவண்டை சொல்லிண்டேதான் இருந்தாளாம்.

அவனும் அதுக்கான பிரயத்தனம் பண்ணிண்டுதான் இருந்தான். இந்தக் காலத்திலே டிரான்ஸ்பர்ங்கறது அத்தனை சாமானியமா சாத்தியப்படறதா என்ன!

இப்படியாகத்தானே மங்களா பயந்துண்டிருந்த மாதிரியே ஒருநாள் 'அந்த விபரீதம் சம்பவிச்சது. அதென்னங்காணும் விபரீதம் கறேளா? கேளுங்கோ.

ஒருநாள் நலங்கு கரைச்சு ஊத்தினாப்பலே சாயரட்சை ஆகாசம் சிவந்து கிடக்கு. பட்சிகள் கூடு திரும்பறது. ராம்குமாரும் வீடு திரும்பறான். தொட்டதும் கதவு பட்டுனு திறந்துக்கறது.

வழக்கமா நாலு தரம் காலிங் பெல் அழுத்தினதுக்கப்புறம், யாருன்னு கேட்டு, குரலைக் காட்டினதுக்கப்புறம்தானே மங்களா கதவைத் திறப்பா; இப்படித் தாழ்ப்பாள் போடாம இருக்க மாட்டாளேன்னுட்டு சம்சயப்பட்டுண்டு, கதவைத் திறந்து உள்ளே அடியெடுத்து வைக்கறானாம். இருளோன்னு கிடக்கறது. விளக்கைப் போடறான்.

அந்தக் காட்சியைப் பார்த்ததும் அப்படியே அலரணும் போல ஆயிடுத்து. தங்கை சாயாவை வாயிலே துணியடைச்சுத் தூணோடு தூணா ஒரு பக்கம் கட்டிப் போட்டிருக்கா. இந்தண்டை திரும்பிப் பார்க்கிறான். கட்டில்லே சாய்ஞ்சாப்பலே கையை நீட்டிண்டு முழிச்சது முழிச்சாப்ல மங்களா அப்படியே அடிச்சு வச்ச சிலையாட்டமாக் கிடக்கறா.

அவளைப் போட்டு உலுக்கி, 'மங்களா மங்களா...'ன்னுட்டு அலர்றான் ராம்குமார். அவளோ பிரமை பிடிச்சுப் போய்க் கிடக்கறா. தங்கை கட்டை அவிழ்த்து வாய்த் துணியை எடுத்து விசாரிக்கிறான்.

அவ சொல்றா, 'அண்ணா, யாரோ ஒருத்தன் எப்படியோ தெரியலை, பின் சுவர் ஏறிக் குதிச்சு உள்ளே நுழைஞ்சுட்டான். மன்னியண்டை கத்தியைக் காட்டினதும், எதுவேணா எடுத்துக்கோ, எங்களை விட்டுடுன்னு சாவிக் கொத்தை எடுத்து நீட்டினா. நான் சத்தம் போடப் பார்த்தேன். என்னை இப்படிக் கட்டிப் போட்டுட்டு எல்லாத்தையும் அள்ளிண்டு போயிட்டான். நகை போனதும் நாக்கு இழுத்துண்டாப்பல மன்னி அப்படியே உறைஞ்சு போயிட்டானே!' என்பதாகத் தானே கேவிக் கேவி அழுதாளாம்.

சமையல் உள்ளிலே பீரோவிலே இருந்த வெள்ளிப் பாத்திரம் எவர் சில்வர் பாத்திரம் எல்லாத்தையும் மூட்டைக் கட்டி எடுத்துட்டுப் போயிட்டிருக்கிறான். லாக்கர்லே பெண்டாட்டி நகை — சாயா கல்யாணத்துக்

சுந்தரபாகவதர்




— கரடிகுளம் ஜெயா பாரதிப்ரியா.

காக அவன் சேர்த்து வச்சிருந்த நகை எல்லாமும் காலி.

இவ்வளவு சாமானையும் ஒருத்தனே எப்படி எடுத்துப் போயிருப்பான்? கூட எவனாவது இருந்தானான்னு தங்கையைக் கேட்கறான். அவ பேந்தப் பேந்த முழிக்கிறா. ஒருத்தனும் இல்லையேங்கறா.

அப்பத்தான் ஒரு போன் வந்தது. எடுத்துக் கேட்டான். அந்தப் பக்கத்துப் போலீஸ்காரர் ரொம்பச் சுறுசுறுப்பு போலிருக்கு. போலீஸ்தான். 'சார், உங்க விட்டிலேருந்து தான் கொள்ளையடிச்சு வந்ததாச் சொல்றான். சாமான்கள் பேர்ல ஆர். கே. ன்னு இனிஷியல் இருக்கு. ஆசாமி உங்க பக்கத்துக்காரன் போல இருக்கான். உங்களுக்குத் தெரிஞ்சவனோ என்னமோ வந்து பாருங்க.' என்பதாகத்தானே இன்ஸ்பெக்டர் கூப்பிடறார்.

இந்தப் பக்கம் பார்யாள் பதுமையா உட்கார்ந்திருக்கா. அந்தப் பக்கம் பறிபோன சாமான் கிடைச்சிருக்கிறதா, இன்ஸ்பெக்டர் கூப்பிடறார். ராம்குமார் இரு தலைக் கொள்ளி எறும்பாத் தவிக்கறான். 'மன்னிக்கு ஒண்ணுமில்லை. நீங்க போங்க. நான் பார்த்துக்கறேன்'னுட்டுத் தைரியம் சொல்லி அனுப்பினானாம் சாயா.

ஆதென கீர்த்தனாரம்பத்திலே எதிர்பாராத அதிர்ஷ்டம்னு பிரஸ்தாபிச்சது இதுதானோன்னு நீங்களா ஒரு முடிவுக்கு வந்தா அதுக்கு நான் ஜவாப்தாரி இல்லே. சித்த பொறுமையா இருக்கணும்.

ஆக, போலீஸ் ஸ்டேஷனுக்குப் போனான் நம்ம ராம்குமார். திருட்டுப் போனதெல்லாத்தையும் பிடிச்சிட்டான்னு நினைச்சுத்தான் போனான்.

அங்கே இன்ஸ்பெக்டர் விவரிச்சாராம். ரிமாண்டிலே வச்சிருந்த ஆளைக் காட்டி. 'இந்த ஆள் ஒரு போர்வையிலே மூட்டை கட்டித் தலைச் சுமையாகத் தூக்கிண்டு போனான். இவன் கூட இன்னொருத்தனும் போன மாதிரிதான் இருந்தது. நாங்க இவனைப் பிடிச்சதும் அவன் எப்படியோ தப்பிச்சிட்டான். அவனை நாங்க பார்த்துக்கறோம். நீங்க இதைப் பாருங்கோ. இதெல்லாம் உங்க சாமான்தானே'ன்னாராம்.

எல்லாம் அவங்க சாமான்தான். ஆனால் அசல் சொத்து எதுவோ, அதைக் காணோமே! கிட்டத்தட்ட ஐம்பது பவுன் நகை — இன்னிய விலைக்கு லகரத்துக்கு மேலே. யாருக்கு உண்டு, யாருக்கு இல்லை? தங்கை கல்யாணத்துக்காகக் குருவி சேர்க்கறாப்பலே அந்தச் சர்க்கார் உத்தியோகஸ்தன் — அதாவது கூடுமானவரைக்கும் ஒழுங்கான சர்க்கார் உத்தியோகஸ்தன் — சேர்த்த சொத்து முழுசும் போச்சே! நரி தின்னக் கோழியும் பறிகொடுத்த நகையும் மீளுமா?

அவன் குடிமுழுகிப் போனாப்பலே — இதுக்கு மேலே என்ன குடி முழுகணும்! அப்படியே தலையிலே துணியைப் போட்டுண்டு கண்ணீரும் கம்பலையுமா இருளடைஞ்ச ரூமுக்குள்ளே, 'என்னைத் தனியா விட்டுருங்கோ. யாரும் டிஸ்டர்ப் பண்ணாதீங்கோ.' என்பதாகத்தானே முடங்கிக் கிடக்கிறானாம்.

அதீதமான சோகம் தாங்காம அண்ணா ஏதாவது பண்ணிக்கப் போறாரோ என்பதாகக் கையைப் பிசைஞ்சிண்டு ரூமுக்கு வெளியே சாயா தவிச்சிண்டிருக்கா. அவனோட மன்னி மங்களா பரப்பிரும்மமா வெறிச்சிண்டிருக்கா.

கவனியுங்க. இந்தச் சமயத்திலேதான் அந்த எதிர்பாராத அதிர்ஷ்டம் நம்ப முடியாத அதிர்ஷ்டம் அவனை நோக்கி வாரது. எப்படி?

கணகணன்னு ஆரத்தி மணியடிக்கறாப்பலே போன் மணியடிக்கறது. அலுப்போட ராம்குமார் அதை எடுத்துக் கேட்கிறான். போனிலே அவனுக்கு மேல சோகத்தோட ஒரு குரல் பேசறது. 'ராம்குமார், உங்க விட்டிலே புகுந்து நகையைக் கொள்ளையடிச்சிண்டு போனவன் நான்தான். ஒரு குண்டுமணி பொன் குறையாம அத்தனையும் என்னண்டை பத்திரமா இருக்கு. நான் உங்களண்டை அத்தனையும் திருப்பிக் கொடுத்திடறதா இருக்கேன். நமக்கு நடுவிலே போலீஸ் விவகாரம் எதுவும் வேணாம். நான் உங்களோட பேசற இந்த விஷயம் வேற யாருக்கும் — முக்கியமா உங்க தங்கை சாயாவுக்குத் தெரிய வேண்டாம். உங்களை நான் நேரில் பார்த்துப் பேசி, உங்க கையிலே ஒப்படைக்கணும்னு அணைக்கட்டுப் பூங்காவிலே, கிழண்டை மகிழ மரத்தண்டை காத்திருப்பேன். எட்டு மணிக்கு மேல காத்து வாங்க வர்றாப்பலே நீங்க அங்கே வாங்க'ன்னு சொல்லி, பொட்டுனு ரிசீவரை வச்சிட்டான்.

இப்ப சொல்லுங்க. லோகத்திலே இது வரைக்கும் — கேவலம் ஒரு சங்கிலித் திருடனாவது மனசு மாறித் திருட்டுக் கொடுத்த பொம்பிளைகிட்ட தான் கொள்ளையடிச்ச நகையைத் திருப்பிக் கொடுத்ததுண்டா? திருடன் கையிலிருந்தே பறிகொடுத்த நகையைத் திருப்பி வாங்கிக்கறதுன்னா அது எப்பேர்க்கொத்த எதிர்பாராத அதிர்ஷ்டம்!

இது நிசம்மாயிருக்குமா, யாராவது என்னை ஆசை காட்டித் தான் பரிதவிக்கறதை வேடிக்கை பார்க்கறதுக்கு இப்படி வேணும்னே போன் செய்திருப்பானோ என்பதாகத்தானே மனசுக்குள்ள குழம்பிண்டே புறப்படறான்.

அணைக்கட்டு பூங்கா. கிழண்டை மகிழ

மரத்தடி. பார்க்கறான். டீஸண்டா டிரெஸ் பண்ணிண்டு ஒரு ஆள் அங்கே காத்திண்டிருக்கான். உத்துப் பார்க்கறான். தன் கீழே வேலை செய்யற மேஸ்திரி ராகவய்யா இல்லையோ இவன்! ரொம்பச் சாது வாச்சே! அவன் காலாலே இட்ட வேலையைத் தலையால செய்வானே. அவன் எங்கே வந்தான்?

'எங்கே ராகவய்யா, என்ன இந்த நேரத்திலே?' என்பதாகத்தானே அவனை விசாரிக்கிறானாம் ஒண்ணும் தெரியாதவனைப் போல்.

ராகவய்யா தலையைக் குனிஞ்சிண்டு, 'எல்லாம் உங்களுக்காகத்தான் சார். நான்தான் உங்களுக்கு போன் பண்ணினேன்'னானாம்.

அணைக்கட்டுப் பக்கம் வெடி வைக்கற வேலை அவனோடது. அவன் வச்ச வெடி தன் காலுக்கடியிலேயே வெடிச்சாப்பல தூக்கி வாரிப் போட்டதாம் ராம்குமாருக்கு. 'ராகவய்யா, நீயா என் வீட்டுக்குள்ள நுழைஞ்சு நகையைக் கொள்ளையடிச்சிட்டுப் போனே? என்னால நம்ப முடியலையே!'

ராகவய்யா சுற்று முற்றும் பார்த்தான். 'காட்டினா நம்புவீங்க இல்லை?'ன்னு கேட்கறான். மடியிலே முடிஞ்சு வச்சிருந்த அத்தனை நகையையும் காட்டறான். ஆனா கையிலே கொடுக்கலை. 'சார், இந்த நகையை உங்களண்டை திருப்பிக் கொடுக்கத்தான் வந்திருக்கேன். அதுக்கு முன்னாடி நீங்க எனக்கு ஒரு வாக்குக் கொடுக்கணும்'கிறான்.

ஆயிரம்தான் இருந்தாலும் ராம்குமாரும் மனுஷன்தானே? அந்த ஒரு நிமிஷத்திலே தன் கீழே வேலை செய்யற ஒரு சாதாரண ஆசாமி தன்னை மிரட்டறமாதிரி என்னவோ பேசறானேன்னுட்டு சிலிர்த்துண்டானாம். போலீஸ் ஏதும் கண்ணில் பட்டால் பிடிச்சுக் கொடுத்துடலாம்னு பார்வையை ஓட்டறான்.

ராகவய்யாவுக்குப் புரிஞ்சு போச்சு. இருந்தாலும் அடக்கிண்டு இதமாவே சொல்றான். 'நான் பட்டவன். நொந்து போய் வந்து நிற்கறேன். என்னன்னு கேளுங்க சார்'ன்னுட்டு சொல்றப்பவே பொல பொலன்னு கண்ணுலே ஜலம் கொட்டறதாம்.



ராம்குமார் ஒரு நிமிஷம் உருகிப் போயிட்டானாம். இந்த இடத்திலே ராகவய்யாவோட விருத்தாந்தத்தைக் கொஞ்சம் விஸ்தரிக்க வேண்டியது அவசியமாறது.

**லோ**கத்திலே எந்தக் குற்றவாளியை எடுத்துண்டாலும் சரி, அவர்களிலே தொண்ணூறு விழுக்காடு சந்தர்ப்பக் கோளாறிலே தப்பு பண்றவாளாத்தான் இருப்பா. எவன் காணும் பிறக்கறச்சையே கையிலே கத்தியோட பிறந்தான்?

திருஷ்டாந்தத்துக்கு நம்ம ராகவய்யாவையே எடுத்துக்குங்க. ஆசைக்கு ஒரே பொண்ணு. உசிரையே வச்சிருந்தான். நல்லாப் படிக்க வச்சான். எங்க பரம்பரைக்கே டிகிரி வாங்கின பொண்ணு, என் பொண்ணுதான்னு பெருமையாச் சொல்லிண்டான். அதுக்குத் தகுந்தாப்பல படிச்ச மாப்பிள்ளையாப் பார்த்தான். எங்கே பேசினாலும் அம்பது பவுனைக் கொண்டா, பண்டம், பாத்திரம் கொண்டான்னு லௌகீகம் பேசறா. பாவம், அம்பது பவுனுக்கு எங்கே போவான் அவன்?

அவனுக்கு வர்ற வரும்படியிலே பொண்ணைப் படிக்க வச்சுக் குடும்பத்தைத் தள்ளிட்டுப் போனதே பெரிசு. ஆனா பெரிய இடத்திலே கொடுக்கணும்னு ஆசை. அக்கம் பக்கம் பார்த்தான்.

புதுசா வந்த ஏ.சி. பசையோட தெரிஞ்சார். அவர் வீட்டுப் பெண்டுகள் நகையோட திரிஞ்சா. கணக்குப் பண்ணான். ஒருநாள் ஒட்டு மீசை வேஷம் கட்டிட்டு உள்ளே பூந்துட்டான். அவன் நினைச்சதை விட சுலபமா அலட்டில்லாம காரியம் முடிஞ்சுது. சாயாதான் கொஞ்சம் துள்ளினா. தூணோடு கட்டிப் போட்டாச்சு. நகையை மட்டும் சுருட்டித் தன் மடியிலே கட்டிண்டான்.

பாத்திரம் பண்டம் கேட்பாங்களே. அதையும் விட்டு வைக்கலே. ஒரு பெரிய போர்வையிலே இருக்கிற வெள்ளி எவர்சில்வர் பாத்திரத்தை அடுக்கி மூட்டை கட்டினான். அவன் அதிர்ஷ்டம் அந்த நேரத்திலே வீட்டுக்குள் அவங்க ஆள் ஒருத்தன் நுழைஞ்சான். அவனைக் கத்தியைக் காட்டி வாயடைக்க வச்சான். அவன் தலையிலேயே மூட்டையைத் தூக்கி வச்சான். நடத்திக் கூட்டிப் போனான். ஆச்சா...?

காலனிக்குள் யாரும் சந்தேகப்படலை. டாம் சைட்டைத் தாண்டிய போது போலீஸ் மடக்கனாப்பல தெரிஞ்சது. மூட்டைத் தூக்கிதான் அகப்பட்டுண்டான். சந்தடி சாக்கிலே இவன் நழுவிட்டான்.

ராகவய்யா இந்த முகமூடி வேஷத்தைக் கலைச்சிட்டா எவனாலேயும் அடையாளம் காட்ட முடியாது. தப்பிச்சாச்சு. அப்புறம் வரன் வீட்டாரண்டை ஜாம் ஜாம்னு பேசின நகையைச் சீராக் கொடுத்துப் பொண்ணு கல்யாணத்தை முடிச்சிட வேண்டியதுதானே?

அப்படி நம்ம ராகவய்யா இட்டத்தைப் பார்த்தும் விதி சிரிச்சதாம். அல்ப மனுஷா, து ரா த் கா ர ம ா உன் பொண்ணுக்கு நீ நினைச்ச பிரகாரம் கல்யாணம் பண்ணிடுவியோ பார்க்கலாம்னுட்டு அது எதிர்ச் சவால் விட்டு விளையாடறதாம்.

அதாகப்பட்டது அந்த ராகவய்யாவோட பட்டதாரிப் பெண், 'நாயனா, நம்ம அத்தை கொடுக்கையே எனக்குப் பிடிச்சிருக்கு. நான் அதையே பெண்டிலி செய்துக்கறேன்' னுட்டு கேட்டப்பவெல்லாம், 'அட சை! அவன் எலிமெண்டரி ஸ்கூலைத் தாண்டாத எடுபிடி வேலைக்காரன். அவனையா பண்ணிக்கப் போறே? நான் உனக்கு மேலே படிச்சவனுக்குத்தான் உன்னை மாங்கல்ய தாரணம் பண்ணிக் கொடுப்பேன்' என்பதாகத்தானே சொல்லிப் பெண்ணை அடக்கிட்டு வந்திருக்கான்.

அப்பனைப் பணிய வைக்க முடியாதுன்னு அந்த ஆதர்சக் காதலி, அவன் நிச்சயித்த முகூர்த்தம் கைகூடி வந்த நேரத்திலே, 'என் படிப்பை வைத்து என் அத்தை கொடுக்கை என்னால் காப்பாத்த முடியும். பிரேம பாசம்தான் பெரிசு' என்பதாக ஒரு சீட்டு எழுதி வைச்சுட்டு அம்பேலாயிட்டாளாம், மேஜர் பொண்ணு. ராகவய்யாவாலே ஒண்ணும் பண்ண முடியலை. அது தான் போகட்டும். பந்துக்களாவது ஐயோ பாவம்னுட்டு ரெண்டு வார்த்தை அனுதாபமாய்ச் சொன்னாளா! அதுவுமில்லை. சொந்தத்தை விட்டுட்டு, பெண் ஆசைப்பட்டதை நிறைவேத்தி வைக்காம எங்கேயோ பணக்கார இடமாய்ப் பார்த்தாரு. என்ன ஆச்சு? பெண் ஆசையை நிறைவேத்தி வைக்காத நீயெல்லாம் என்னய்யா மனுஷன்?' இப்படியாகத்தானே நாலா பக்கமும் ராகவய்யாவுக்குக் கண்டனம்; வசவிலே லட்சார்ச்சனை.

**எ**ன்னுடைய கதி என் எதிரிக்குக் கூட வரப்படாது என்பதாகத்தானே தீர்மானம் பண்ணிக் கொண்டான் ராகவய்யா. அதனால்தான் எடுத்த நகையைத் திரும்பக் கொண்டு வந்து ராம்குமாரிடம் ஒப்படைச்சுடப் பார்க்கறானாம். இப்ப ஒரு கண்டிஷனுக்கு ஒப்புத்துக்கிட்டா கொடுக்கிறதாய்ச் சொல்றானாம். தன் மகளுக்குத் தான் செய்த அநியாயத்துக்கு அதாகப்பட்டது அவள் ஆசைப்பட்டாளே அந்தக் காதலனோட அவளைச் சேர்த்து வைக்காத

---

பத்தே பத்துப் பேர்தான் போராட்டம் நடத்துறீங்க; இதுக்குப் போய் நூற்றுக்கணக்கான போலீஸார் பாதுகாப்புக்கு வரணுமா...?''

''பாதுகாப்புக்கு இல்லீங்க. பார்க்கிறவங்களுக்குப் போராட்டம் மாதிரி தெரியணுமில்லே...!''

— கரடிகுளம் ஜெயா பாரதிப்ரியா.








''என்னங்க ரசிகர் மன்றத்தினர் இனிப்பு வழங்குறதுக்குப் பதிலா தலை வலி மாத்திரை வழங்குறாங்க!''

''படம் கொஞ்சம் போராம்!''

— கடுவை. கோபால்சாமி.

பாவத்துக்கு — பிராயச்சித்தம் செய்யப் போறதாப் பேத்திண்டு இருக்கானாம்.

அவன் சொல்லச் சொல்ல சிண்டைப் பிச்சுக்கணும் போல இருக்காம் ராம்குமாருக்கு.

'அப்பனே, உனக்குப் புண்ணியமாப் போகட்டும். உன் கண்டிஷன் என்னங்கறதைத் தயவு பண்ணிச் சொல்லித் தொலைச்சிடப்பா'ன்னுட்டு ராம்குமார் அவன் கையைப் பிடிச்சிண்டு கெஞ்சறான்.

'ரண்டு கண்டிஷன் சார். ஒண்ணு, ரிமாண்டிலே இருக்குதே, அந்தத் தம்பியை நீங்க ஜாமீன் கொடுத்து வெளியே கொண்டு வரணும் சார்!'

'வாட்?' ராம்குமார் போட்ட சத்தத்தில் தூரத்திலே இருந்தவங்க கூடத் திரும்பிப் பார்த்தாங்களாம். 'கொள்ளைக்கார ராஸ்கல் அவன். வேணும்னா உன் கூட்டாளி அவனாக்கும்னு காட்டிக் கொடுக்காம விட றேன்.'

ராகவய்யா கண்ணைக் கசக்கறானாம். 'சார், நான் முதல்லயே சொன்னேன். அவன் என் கூட்டாளி இல்ல. நான் உங்க வீட்டுக்கு வந்தப்ப அவன் வந்தான். அவன் தலையிலே மூட்டையை ஏத்திக் கூட்டிப் போனேன்னு. அவனுக்கு இந்தக் கொள்ளையிலே சம்பந்தமே இல்லை.

'அப்படியானா அவன் அதைப் போலீசிலே சொல்லியிருக்கலாமில்லையா? ஏன் சொல்லலை?'

'காரணம் இருக்கு சார். முதல்லே நீங்க ஜாமீன் கொடுத்து அவனை வெளியே கொண்டு வர ஒப்புத்துக்குங்க. சொல்றேன்.'

ராம்குமார் யோசிச்சான். அவனை வெளியே கொண்டு வரதிலே பெரிய நஷ்டம் ஒண்ணும் இல்லை. இந்த ஐம்பது பவுன் நகை லாபம்தான். 'ஓ.கே. அவனை வெளியே கொண்டு வரேன். போதுமா?'

'ரெண்டாவது கண்டிஷன் சொல்லலையே!'

'சொல்லு.'

ராகவய்யா கொஞ்சம் எச்சில் முழுங்கறான். சுற்று முற்றும் பார்த்துக்கறான். 'ரெண்டாவது கண்டிஷன் வந்து சார்.. உங்க தங்கை சாயாவை அவனுக்குக் கல்யாணம் பண்ணிக் கொடுக்கணும்.'

'வாட்?' இந்தத் தடவை அவன் போட்ட சத்தத்திலே தூரத்தில் போய்க் கொண்டிருந்த இரண்டொருத்தர் என்ன என்னன்னு கேட்டுண்டே கிட்டக்க வந்துட்டா.

அவாளைச் சமாளிச்சு அனுப்பிச்சப்புறம் ராகவய்யா சமாதானமாச் சொல்றானாம். 'சார், உங்க நல்லதுக்குத்தான் சொல்றேன். என் கதி உங்களுக்கு வரப்படாது. என் பொண்ணுக்கு நான் செய்த பாவத்துக்குப் பிராயச்சித்தமாத்தான் இதைச் சொல்றேன்.'

என்ன உளர்றான் இவன்னு வெறிக்கறான் ராம்குமார். அவன் விளக்கறானாம்.

'அந்தத் தம்பி எதுக்கு உங்க வீட்டுக்கு வந்தான் தெரியுமா? இன்னிக்கு இல்லே. நீங்க இல்லாத நேரத்திலே உங்க உடன் பிறந்தாளைப் பார்க்க அடிக்கடி வர்றவன் தான். அவன் பேர் கார்த்தி; உங்க தங்கையும் அவனும் உயிருக்குயிரா நேசிக்கிறா. என்னண்டை அவன் எல்லாத்தையும் சொன்னான். இதே விஷயத்தை அவன் நினைச்சிருந்தா இன்ஸ்பெக்டரண்டை சொல்லித் தப்பிச்சிருக்கலாம். கார்த்தி சொல்லலை. ஏன்? தன்னைத் திருடன்னு சொல்லி ஒப்புக்கிட்டு ரிமாண்டிலே இருக்கிறான். ஏன் யோசிச்சுப் பாருங்கய்யா. உண்மையைச் சொல்லியிருந்தா உங்க தங்கை பேர் கெடும். அதனாலே உங்க பேர் ஊர் சிரிச்சுப் போகும். இதிலேர்ந்தே அந்தப் பிள்ளையாண்டானோட நல்ல மனசு உங்களுக்குத் தெரியலையா...?'

அவன் உருக்கமாப் பேசப் பேச அப்படியே மெல்ட் ஆயிட்டானாம் ராம்குமார். கடோசிலே, 'சொன்னபடியே செய்யறேன்'னுட்டு ஒப்புக்கிட்டானாம்.

'என் பொண்ணு கல்யாணத்தை நானே நடத்தி வச்சாப்பலே இருக்கு சார்'னு சொல்லிட்டு ஒரு கையிலே கண்ணைத் துடைச்சிண்டு இன்னொரு கையிலே நகையை எடுத்துக் கொடுத்தானாம் ராகவய்யா.

நகையோட வீட்டுக்கு வர்றான், ராம்குமார். மலங்க மலங்க முழிச்சிண்டிருந்த மங்களா கண்ணெதிரே அவ முத்து நெக்லஸைக் கொத்தா எடுத்து ஆட்டினதும் மெந்தால் வாசனையிலே மயக்கம் தெளிஞ்சாப்பலே அவளுக்கு ஸ்மரணை வந்துட்டதாம்.

அடுத்தாப்பலே தங்கை சாயாவண்டை வர்றான். நகை கிடைச்சிட்டதுன்னு காட்டறான். அதைப் பார்த்து அவ பொங்கிப் பொங்கி அழுறாளாம். ராம்குமார் உள்ளுக்குள் சிரிச்சுக்கறான்.

'இந்தப் பொன்னகையெல்லாம் வேணாம், உன் கார்த்தியோட புன்னகை தான் வேணுமாக்கும்?' என்பதாகத்தானே அவளைச் சீண்டிப் பார்க்கறானாம்.

சாயா முதல்லே திகைச்சு, அப்புறம் அண்ணனைப் புரிஞ்சுண்டு சினிமாப் பரம்பரையாச் சொல்ற, 'போங்கண்ணா.' சிணுங்கல் காட்டிட்டுப் போறானாம்.

எதிர்பாராத அதிர்ஷ்டம் எவருக்கேனும் கிட்டியதுன்னா அதன் முடிவிலே இப்படி மங்களகரமா ஒரு பாணிக்கிரஹணம் பண்ணி வைக்கணும்! அப்பத்தான் அதிர்ஷ்ட தேவதை ஆனந்தப்பட்டு ஆசீர்வாதம் பண்ணுவாங்கறதை ஞாபகத்திலே வச்சுக்கணும் என்கிறதுதான் லோகத்தார் இந்தக் கதையாலே தெரிஞ்சிக்க வேண்டிய நீதியாக்கும்!

# ஓர் ஆண் கணவனாகிறான்

பளார்!

முதன் முறையாக அறைந்தான் சந்தர். இந்த முறை சற்று எல்லை மீறிவிட்டான்.

அடியுங்கோ... நன்னா அடியுங்கோ... அதுக்குத்தானே வாழ்க்கைப் பட்டிருக்கேன்...?

''ஆமாம், உன்னை அடிக்கணும்னு எனக்கு ஆசை!''

''பின்னே எதுக்காக அறையணும்? அப்படி என்ன குடிபோகிற காரியம் பண்ணிட்டேன்...?''

அப்படி என்னதான் செய்தாள்? பிரச்னை என்ன? ஓர் உபயோகமில்லாத டெரிகாட் பாண்ட். அதைப் போட்டுப் பிளாஸ்டிக் பக்கெட் வாங்கிவிட்டாள்.

''யாரைக் கேட்டு நீ இந்தக் காரியம் செஞ்சே?''

''ஏன்... நேக்கு உரிமை இல்லையா?''

''ஒரு வார்த்தை, இந்த மாதிரி செய்யப் போறேன்னு... ஒரே ஒரு வார்த்தை என் கிட்ட சொல்லலாமோல்லியோ...?''

''இதுக்கெல்லாம் பர்மிஷன் கேட்க



ணுமா? இந்த வீட்டிலே நானா எதுவும் செய்யக் கூடாதா? சுதந்திரமாச் செயல் படக் கூடாதா?''

''எனக்குப் பொய் ஆகாதுன்னு தெரியுமில்லே?''

''பொய்யா? என்ன பொய்?''

''விஷயத்தை மறைச்சது.''

''அதைப் பொய்யிங்கறேளா?''

''உண்மையைச் சொல்லாம இருக்கிறதை என்னன்னு சொல்றது?''

''அவசியம்னு தோணலை. அதனால சொல்லலே. நீங்க எத்தனை பாண்ட் வச்சிருக்கேள்?''

தலை தீபாவளிக்காகப் புவனியின் அப்பா, சிவப்பு நிறத்தில் எடுத்துக் கொடுத்திருந்தார். பிறந்த நாளுக்குப் பொடிக் கலரில், தீபாவளிக்கு இவன் எடுத்தது ஒன்று. எட்செட்ரா... எட்செட்ரா... பதின்மூன்று பாண்ட்டுகள் பஞ்சமில்லாமல் வைத்திருக்கிறான்.

''இன்னிக்கு இந்த விஷயத்தை மறைப்பே. கண்டுக்காம விட்டுட்டாத் தொடர்கதையாயிடும்.''

''அதுக்காக, கைநீட்டிடறதா? எனக்குத் தெரியும். அடிக்கிற அளவுக்கு இது ஒண்ணும் பெரிய விஷயமில்லே. நான் உங்களுக்குத் தொந்தரவா இருந்தாச் சொல்லிடுங்கோ.''

''இது சொல்லித்தான் தெரியணுமா? நீ இருக்கிற வரை எனக்கு நிம்மதியே இல்லை. போயேன்! உங்க அப்பா வீட்டுக்கே...''

''நான் எதுக்காக அங்கே போறேன்? பவுன் போட்டுக் கல்யாணம் பண்ணிக் குடுத்திட்டுக் காலம் பூரா அவா கஷ்டப்படணுமா?''

''எங்காவது ஒழி!''

''ஒழியறேன்... சொல்லிட்டேளோல்லியோ, கைநீட்டிட்டேளோல்லியோ ஒரேயடியா ஒழிஞ்...சு போயிடறேன்!''

''செத்துத் தொலை! அப்போதான் எனக்கு நிம்மதி.''

அப்புறம் பேச்சில்லை.

புவனி மூலையில் சரிந்து உட்கார்ந்து அழுதாள். அந்த பக்கெட் சந்தருக்குச் சிரிப்பது போல இருந்தது. அப்படியே போட்டு மிதித்தான். படபடவென்று நொறுங்கியது. எஞ்சியிருந்த பாண்ட்டுகளையெல்லாம் கலைத்து வீசினான். புடைவையைக் கிழித்தான்.

புவனி தீர்மானித்தவள் போல எழுந்தாள். உடையைச் சரி செய்து கொண்டு அடுப்பறைக்குள் நுழைந்தாள். கண்ணாடி பார்த்தாள். முடி ஒதுக்கிக் கொண்டாள். மீண்டும் சமையலறைக்குள் சென்றாள்.

சற்று நேரம் நிசப்தம்.

சந்தர் திண்ணையிலிருந்து எட்டிப் பார்த்தான். புவனி இல்லை. மெல்லச் சமையலறைக்குள் சென்றான். ஜன்னல் சாத்தப்பட்டு இருளடித்தது.

எங்கே சென்றிருப்பாள்?

கொல்லைப்புறம் திறந்திருந்தது.

முத்து மாமா வீட்டுக்குப் போயிருப்பாள், வத்தி வைப்பதற்காக.

முத்து மாமா பின்பக்கத் தெருவில் இருக்கிறார். உறவுக்காரர் இல்லை. பொதுவாக மாமா என்று கூப்பிடுவதற்குப் பொருத்தமான தோற்றம் — வயது. எனவே, மாமா.

மிகவும் நேர்மையாக, தீர்க்கமாகப் பேசுவார். ஒருவரின் குற்றத்தை அவரே உணரும்படி எடுத்துச் சொல்வதில் ஜாம்பவான்.

சந்தர் சென்றபோது முத்து மாமா தீவிரமாக என்னவோ எழுதிக் கொண்டிருந்தவர் நிமிர்ந்து பார்த்தார்.

''நமஸ்காரம் மாமா.''

''வா சந்தர்! உள்ளே வா...''

''மாமா! புவனி வந்தாளா?''

''இல்லையே! என்ன விஷயம்?'' என்று நெற்றியைச் சுருக்கினார்.

''ஒண்ணுமில்லை.''

அந்த ஒற்றை வார்த்தையை வித்தியாசமாக உணர்ந்தார். ஏதோ இருக்கிறது!

''சும்மா சொல்லேண்டா... மனசுக்குள்ள வெச்சுண்டே அல்லாடக் கூடாது. வெளிப்படையாப் பேசக் கத்துக்கோ.''

''புவனியோட ஒரு சின்ன மனஸ்தாபம்... கோவிச்சுண்டு போயிட்டா.''

இப்போது அவன் கண்களைப் பார்த்தார்.

''நீ அவளை அடிச்சியா?'' என்றார்.

''ஆம்.''

''முட்டாள்!''

''இல்லே மாமா! அவள் என்கிட்ட பேசற விதமே சரியில்லை. வார்த்தைகள் சுத்தமில்லே.''

''அவள் எப்படி நடந்துக்கணும், எப்படிப் பேசணும்னு நீ எதிர்பார்க்கிறே...? சொல்லு!''

''சின்ன விஷயம்தான். ஆனால், அவள் செஞ்ச முறையிலேதான் தப்பு'' என்று எல்லாவற்றையும் சொன்னான்.

நடந்ததை அச்சாக எடுத்து வைத்தான். அவனுக்குப் பொய் ஆகாது.

''இப்ப சொல்லுங்கோ. பாண்ட் விஷயத்தை எதுக்காக மறைக்கணும்? நானாகக் கேட்கிறவரை அவள் சொல்லாமல் இருந்ததுக்கு என்ன அர்த்தம்?''

''அதோட முக்கியத்துவத்தை அவள் உணரலை, அவ்வளவுதான். அடிக்கிறது தப்பு. இதபார் சந்தர், பெண்களெல்லாம் எப்போதுமே குழந்தைகள்தான். அவாளோட மிருதுவான இதயத்துக்கு அத்தனை தாங்கும் சக்தி கிடையாது. இனிமேல் கைநீட்டாதே! நிதானமாப் பேசு. எந்த விஷயத்தையும் மெல்ல மெல்லப் பெண்டாட்டிக்குப் புரிய வைக்கிற

புதுகை எம்.பி.எஸ்

திலே எத்தனை சந்தோஷம் இருக்கு தெரியுமா?''

''இப்ப நான் என்ன செய்யட்டும்னு சொல்லுங்கோ, மாமா.''

''நேராக வீட்டுக்குப் போ. வந்துடுவா.''

''இல்லை மாமா. நானே அவா அப்பா வீட்டிலே இருந்தா கூட்டிண்டு வந்துடறேன். நான் கொஞ்சம் முரட்டுத் தனமா நடந்துண்டேன்னு இப்பத்தான் எனக்குப் படறது.''

**ச**ந்தர் மெலிதாக உணரத் தொடங்கினான். நிதானமாக உட்கார்ந்து பேசியே புரிய வைத்திருக்கலாமே! கைநீட்ட வேண்டிய அவசியம்? அவள் அம்மாவிடம் இந்நேரம் சொல்லியிருப்பாளோ? யோசித்ததில் சற்று வெட்கமாகக் கூட இருந்தது.

செட்டியார் ஜவுளியைக் கடந்து, மூன்றாவது தெருவுக்கு வந்து, குறுக்குச் சந்தில் திரும்பி, அவள் அப்பா வீட்டிற்குப் போகும் முன்புதான் அந்த விபரீதத்தைப் பார்த்தான், சந்தர்.

சற்றுத் தூரத்தில் ஒரு கிணற்றைச் சுற்றி ஜனத்திரள். எல்லாத் திசைகளிலிருந்தும், கிணறே இலக்காக எல்லோரும் ஓடிக் கொண்டிருக்க, ஒரு கான்வென்ட் சிறுமியை நிறுத்தி, ''என்ன அங்கே?'' என்றான்.

''ஒரு லேடீ பாடி மிதக்குதாம்...''

திடுக்கிட்டான். கிணற்றை நெருங்கினான்.

''இளம் வயசுங்க...''

''சூயிசைட் பண்ணிக்கிற அளவுக்கு என்ன விரக்தியோ...?''

கூட்டம் சந்தரை இடைவெளியில்லாமல் பிந்தித் தள்ளியது.

சந்தர் ஆக்ரோஷமாக ஊடுருவினான். நல்லவேளை; புவனி இல்லை.

நைலக்ஸ் ஸாரி நீரில் அலைந்து கொண்டிருந்தது. இளம் மஞ்சளில் புதிய தாலி ஜொலித்தது. வலது கன்னத்தைக் கூர்ந்து கவனித்ததில் விரல்களின் அடையாளம் போலத் தெரிந்தது.

அறைந்திருப்பானோ!

'சொல்லிட்டேளோல்லியோ... கை நீட்டிட்டேளோல்லியோ... ஒரேயடியா ஒழிஞ்சு போயிடறேன்!'

'செத்துத் தொலை!'

'புவனி வர்றேன். வந்துவிடுகிறேன். இனிமேல் அறைய மாட்டேன். அடிக்... கவே மாட்டேன். புவனி வந்துவிடுகிறேன். கிணறு வேண்டாம். புவனி... புவனி...'

**பு**வனியின் பிறந்த வீட்டிற்கு வந்த போது, அவள் அப்பா இல்லை. மாமி தான், ''வாங்கோ'' என்றாள்.

''புவனி வரலை?''

''அவளைத்தான் தேடிண்டு வந்திருக்கேன்.''

''தேடிண்டா? எப்ப போனாள்? உங்களண்டை சொல்லலியோ...?''

''இல்லைமாமி. கார்த்தால ஒரு சின்னப் பிரச்னை.''

''மறுபடி வேதாளமா? இ தே தா பாருங்கோ, நீங்க சின்னஞ்சிறுசுகள். புதுக்குடித்தனம் நடத்தறவா. எவ்வளவு சந்தோஷமா இருக்கணும். அவளே ஏதானும் தப்பு பண்ணினாலும் நீங்கதானே, அனுசரிச்சுப் போகணும்.''

''தப்பு எம்பேர்லதான் மாமி. நானே ஃபீல் பண்றேன். என்னதான் கோபமாயிருந்தாலும் அடிச்சிருக்கக் கூடாது.''

''என்னது! அடிச்சிட்டேளா? நீங்க செய்யறது கொஞ்சமும் நன்னாயில்லே. ஒவ்வொருத்தர் எத்தனை அற்புதமாக் குடும்பம் பண்றா?''

''அத்திம்பேர்! அக்காவை அடிச்சேளா? இங்கேதான் தினம் தினம் அப்பாம்மா சண்டையிலே நிம்மதி போயிடும். உங்களண்டையும் அவளுக்குச் சந்







— பொடுசி

தோஷமில்லையா....? '' என்றாள் சின்னவள். கண்களில் நீர் தெரிந்தது.

மாமி திடீரென்று ஞாபகம் வந்தவள் போல, ''முத்து மாமா வீட்டில் விசாரிச்சேளா?'' என்றாள்.

''அங்கேயும் போகலை. பார்த்துட்டுத்தான் வர்றேன். அப்புறம் இன்னொரு விஷயம்...'' — தயங்கினான்.

''என்ன?''

அதைச் சொல்லும் போது அவனுக்கு ஏறத்தாழ அழாத குறை.

''மாமி, வருகிற வழியில் பார்த்தேன். ஒரு கிணத்துக்குப் பக்கத்திலே...''

''கிணறா?''

''ஒரு பொண்ணு தற்கொலை பண்ணிண்டு மிதக்கிறா...''

''அய்யய்யோ தற்கொலையா...? பொண்ணா...? அட முருகா, கிருஷ்ணா, ஏழுமலையானே... நீங்க கிட்டத்தில போய்ப் பார்த்தேளா? முகத்தைப் பார்த்தேளா...?''

''அய்யோ அம்மா. நீ சித்த சும்மாயிரு. ஏற்கெனவே அவர் குழம்பியிருக்கார். அத்திம்பேர்! நீங்க நேரா வீட்டுக்குப் போங்கோ. அக்கா இந்த மாதிரியெல்லாம் முடிவெடுத்திட மாட்டா. இருந்தாலும் நீங்க விரைவாப் போங்கோ. அப்பா வந்துட்டார்ன்னா வேறு இடங்களிலேயும் தேடிப் பார்க்கிறோம். முதல்ல கிளம்புங்கோ.''

''சரி. நான் வர்றேன். இடையில இங்கே வந்துட்டான்னா, அனுப்ப வேண்டாம். நான் வந்து அழைச்சிண்டு போறேன். வர்றேன் மாமி.''

''போறச்சே அந்தக் கிணத்தை இன்னொருதடவை பார்த்துட்டுப் போங்கோ. இந்தப் பொண்ணு எங்கே போனாளோ... என்ன செஞ்சுண்டாளோ! இந்த நேரத்தில இந்த மனுஷா வேற வீட்டில் இல்லாம எங்கே போனார்...''

அங்கிருந்து வீட்டிற்குத் திரும்பும் போது, மறுபடி அந்தக் கிணற்றைச் சந்திக்கத் தைரியமில்லாமல் வேறு வழியில் தான் வந்தான். கடந்து போகும் பெண்களையெல்லாம் சற்றுக் கவனமாகவே பார்த்தான். பஸ் ஸ்டாப்பில் நின்ற பெண்களில் பக்கவாட்டுத் தோற்றத்தில் ஒருத்தி புவனி போல் தெரிந்து மறைய, கிட்டே சென்று பார்த்ததில் புவனியில்லை.

'புவனி! புவனி! என்னை ஏன் இப்படி அல்லாட வைக்கிறே? இனிமேல் அடிக்க மாட்டேன். ஸாரி, ஐ ஆம் ஸோ ஸாரி புவனி.'

**வீ**ட்டிற்கு வந்தபோது திடுக்கிட்டான். வெளிக்கதவு வெறிச்சென்று திறந்து கிடந்தது. உள்ளே நுழைந்தவன் அப்படியே ஸ்தம்பித்து நின்றான்.

புவனி சமையற்கட்டில் நிதானமாகக் காப்பி தயாரித்துக் கொண்டிருந்தாள்.



தந்தை: ஏம்மா! புருஷன் கூடக் கோவிச்சுக்கிட்டு ஊரிலேயிருந்து இவ்வளவு தூரம் தன்னந்தனியே வந்திருக்கியே; உனக்குப் பயமாகவே இல்லையா?

மகள்: அவர்தான் தெருக்கோடி வரைக்கும் வந்து விட்டுட்டுப் போறாரே, அப்புறம் என்னப்பா பயம்...?

— பெ. கலாசாமி.

அவளிடம் எப்போதும் மாற்றுச் சாவி வைத்திருப்பாள். இவனைப் பார்த்ததும் இயல்பாகத் திரும்பினாள்.

''என்ன புவனி! எங்கே போயிருந்தே இத்தனை நாழி?''

''இன்னும் கோபம் தீரலையா? இந்தாங்கோ...''

''உன் காப்பியைக் கொண்டு போய்ச் சாக்கடையில கொட்டு. முதல்ல கேட்ட கேள்விக்குப் பதில்?''

''இங்கே இருந்தால் பிரச்னை வருமோன்னுதான்...?''

''எங்கே போயிருந்தேன்னு கேட்டேன்.''

''சினிமாவுக்கு.''

''என்னது! சினிமாவுக்கா? எங்கிட்ட சொன்னியாடீ...?''

''கேட்டா விடுவேளா... நீங்க அப்போ இருந்த கோபத்தில்...?''

மறுபடியும் பொய்யா? எனக்குப் பொய் ஆகாதுன்னு தெரியுமில்லே...?''

கோபம் கொப்புளிக்கத் துவங்கியது.

''இதில என்ன பொய் இருக்கு? சொன்னால் விட மாட்டேள். இங்கிருந்தாலும் பிரச்னை பெரிசாகும். இருக்கிற பாத்திரத்தையெல்லாம் போட்டு உடைப்பேள்... ஏன்னா முகம் ஒரு மாதிரி ஆறது...?''

கண நேரத்தில் அவனுள் அன்றைய அத்தனை நிகழ்ச்சிகளும் மறைந்து போய், அவளிடம் தலைதூக்கிய கோபம் வெடிக்க, ஆக்ரோஷமாகக் கையை ஓங்கினான்!

பளார்!!!

13

# இன்று இறப்பு விழா

ஆரத்துக் கட்டடத்தின் உச்சியில், டெலஸ்கோப்பிக் ரைஃபிளோடு அசையும் அந்த உருவத்தைப் பார்த்துக் கொண்டே, மெதுவாய் எழுந்து, அறைக்குள் பின்வாங்கினான் விவேக். சிட் அவுட் கதவைச் சாத்தி விட்டு, அறையை இருட்டுக்குக் கொண்டு வந்து, ஜன்னல் வழியே எட்டிப் பார்த்துப் பார்வையை மறுபடியும் கட்டடத்தின் உச்சிக்குத் துரத்தினான். விவேக்கின் தோளைப் பற்றிக் கொண்டு ரூபலாவும் எட்டிப் பார்த்தாள்.

''யாருங்க அவன்...?''

''ஓர் இந்திய கழுகா இருக்கலாம்.. ரூபலா! இந்த ஜன்னல் வழியா அவனோட நடவடிக்கைகளைப் பார்த்திட்டிரு... நான் போய் ஆளை அமுக்கறேன்...''

''நீங்க மட்டும் தனியாவா போறீங்க...?''

''ஆகா... அதுதான் உசிதம். இங்கே ஹோட்டலைச் சுற்றியும் செக்யூரிடிக்காக நிற்கிற போலீஸ்... கொஞ்சம் பரபரப்படைந்தாலும் எதிரி உஷாராயிடுவான். நானும் ஹோட்டலுக்குப் பின்பக்க வழியில் வெளியேறி ரோட்டைச் சுத்திக்கிட்டுத்தான் அந்தக் கட்டடத்தை நெருங்கணும்.''

''அது என்ன கட்டடம்ங்கிறதைப் பார்த்துக்கிட்டீங்களா?''

''தெரியும்... இன்சூரன்ஸ் கம்பெனிக்காகக் கட்டப்படுகிற கட்டடம்... மொத்தம் ஏழு மாடி. இந்த ஹோட்டலுக்கு வந்த நாளே எல்லாத்தையும் நோட் பண்ணிட்டேன்.'' விவேக் சொல்லிக் கொண்டே கனமான ஜெர்கின் கோட்டுக்குள் நுழைந்தான். பிஸ்டலை எடுத்து ஒரு பாக்கெட்டுக்குள் பதுக்கினான். ரூபலா ஜன்னல் வழியே தொலைவில் தெரியும் அந்த உருவத்தையே பார்த்துக் கொண்டிருந்தாள். பெரிய கண்களில் ஏராள பயம்.

''ஆள் இன்னமும் இருக்கானா..?''

''இருக்கான்.''

''சரி... நீ பார்த்திட்டிரு. நான் கிளம்பறேன்.''

''ஜாக்கிரதை.''

ரூபலாவின் குரல் முதுகில் வந்து மோத, விவேக் வெளியே வந்தான். ஹோட்டலின் வராந்தாவில் கால் பாவாமல் ஓடி; காலியாய்க் காத்திருந்த லிப்ட்டுக்குள் நுழைந்து, வேகமாய் உயரம் இழந்து, க்ரௌண்ட் ப்ளோருக்கு வந்தான். எதிர்ப்பட்ட ஒரு வெயிட்டரிடம் ஹோட்டலின் பின்பக்க வழியை விசாரித்துக் கொண்டு ஓடி, கிச்சன் கேபின் ஸ்டோர் ரூமைச் சப்பாத்தி வாசனையோடு கடந்து பின்பக்கம் வந்தான். இருட்டில் சுமாரான உயரத்தில் தெரிந்த காம்பௌண்ட் சுவரைத் தாண்டிக் குதித்தான்.

ஆள் நடமாட்டம் அற்ற ரோடு.

குப்பைத் தொட்டிக்குள் எதையோ மும்முரமாய்க் கிளறிக் கொண்டிருந்த சோனியான ஒரு நாய் மட்டும் தலையைத் தூக்கிப் பார்த்து விட்டு, மீண்டும் காரியத்தில் மும்முரமானது. விவேக் கிட்டத்தட்ட பென் ஜான்சனின் வேகத்தோடு ஓடி, ஹோட்டலைச் சுற்றிக் கொண்டு, ரோட்டின் ஓரத்தில் கொட்டிக் கிடந்த இருட்டில், பதுங்கிப் பதுங்கி அந்த இன்சூரன்ஸ் கட்டடத்தின் அடிவாரத்தை நெருங்கினான். அண்ணாந்து பார்த்தான்.

ஏராளமான பில்லர்கள், இரும்புக் குழாய்கள், கான்க்ரீட் பலகைகளோடு கட்டடம் இருட்டில் பூதாகரமாய்த் தெரிந்தது. பென் டார்ச்சை உசுப்பிக் கொண்டு செங்கல் சிமெண்ட் பூச்சோடு தெரிந்த மாடிப் படிகளை நோக்கிப் போனான்.

''கோன்...?''

குரல் கேட்டுத் திரும்பினான் விவேக்.

தகர டின்களுக்குப் பக்கத்தில், போர்வையைப் போர்த்திக் கொண்டு உட்கார்ந்திருந்த உருவம் ஒன்று எழுந்து வந்தது. கையில் பீடியின் நெருப்புக் கண் தெரிந்தது.

விவேக் அவனை வேகமாய் நெருங்கினான். கீழ்ஸ்தாயி இந்தியில் மெல்லக் கிசுகிசுத்தான்.

''சத்தம் போடாதே! நான் போலீஸ். கட்டடத்து உச்சியில் யார் இருக்காங்க...?''

போலீஸ் என்று சொன்னதும் அவன் கையிலிருந்த பீடியை வீசியெறிந்து விட்டுப் பவ்யமானான். ''கட்டடத்து மேல யாரும் இல்ல ஸார். இந் நேரத்துக்கு அப்படி யாரும் மேல போகவும் மாட்டாங்க. நான்தான் இங்கே வாட்ச்மேன். எட்டு மணியிலிருந்து இங்கேதான் உட்கார்ந்திட்டிருக்கேன்.''

''நான் பார்த்துட்டு வர்றேன். நீ கீழேயே நில்லு.''

ராஜேஷ்குமார்

' ''சரி ஸார்.''

கொஞ்சம் கலவரமாய் அவன் தலையாட்ட, விவேக் செங்கல் படிகளில் ஏறினான். மூங்கில் கம்புகளைப் பற்றிக்கொண்டு இரண்டிரண்டு படிகளாய்த் தாவி, லேசாய் மூச்சு வாங்கி, ஒவ்வொரு மாடியாய் உயர்ந்தான். இடது கையில் பிஸ்டல் ஜாக்கிரதையாக உட்கார்ந்திருந்தது. டார்ச் வெளிச்சம் கோணல்மாணலாய் வழிகாட்டியது.

ஆறாவது மாடிக்கு வந்ததும் விவேக் நின்றான். உடம்பு வியர்த்து ஊற்றியது. பெரிது பெரிதாய் மூச்சு வாங்கிக் கொண்டு சுற்றும் முற்றும் பார்த்தான்.

நிசப்தம்.

சுற்றிலும் சிமெண்டின் ஈர வாசனை. மெல்ல ஏழாவது மாடியை நோக்கி நடந்தான். மனசு பரபரத்தது.

'அந்த டெலஸ்கோப்பிக் ரைஃபிள் பேர்வழி, ஏழாவது மாடியில்தான் இருப்பான்.' உடம்பின் மில்லியன் கணக்கான செல்களும் போர்க் கவசம் பூண்ட மாதிரி தயார் நிலைக்கு வந்தது. விவேக், வளைந்து போன படிகளில், ஒரு பூனையின் லாவகத்தோடு ஏறினான்.

படிகள் உயர்ந்து மொட்டை மாடியின் விளிம்பைத் தொட, விவேக் உச்சிப் படியில் உட்கார்ந்து மெல்லத் தலைநீட்டினான்.

மொட்டை மாடி பரப்பு பூராவும் கான்க்ரீட் கம்பிகள் கோணல் மாணலாய் நீட்டிக்கொண்டிருக்க, காற்று வேகமாய் அடித்தது. விவேக் சுற்றும் முற்றும் பார்த்தான்.

ஆள் யாருமில்லை.

தலைக்கு மேல் வானம் நட்சத்திரங்களோடு காய்த்துக் கிடந்தது. விவேக் கையில் பிஸ்டலோடு எழுந்து மொட்டை மாடிக்குள் பிரவேசித்தான். கான்க்ரீட் கம்பிகளுக்கு மத்தியில் சிரமமாய் நடந்த போது, கண்கள் லேசர் யூனிட்டாய் மாறியது.

மாடியின் வலது பக்க விளிம்பில் —

நிழலுருவமாய் யாரோ நின்றிருந்தார்கள். தலையில் தொப்பி அணிந்திருப்பது தெரிந்தது. விவேக் சட்டென்று தரையில் உட்கார்ந்து, கைகளாலும் கால்களாலும் தவழ்ந்து கொஞ்சம் கொஞ்சமாய் உரு



வத்தை நெருங்கினான்.

இருபதடி....

பத்தடி....

ஐந்தடி....

பக்கத்தில் போனதும் குபீரென்று எழுந்து, உருவத்தின் முதுகில் ரிவால்வரைப் பதித்தான் விவேக். தன் வலது கையால், உருவம் அணிந்திருந்த ஓவர்கோட்டின் காலரைப் பற்றினான். உறுமினான்.

''கெட் பேக்...''

உருவம் அசையாமல் நின்றது.

''ஐ... ஸே... கெட் பேக்...'' இரண்டாவது தடவை உறுமிக் கொண்டே கோட்டின் காலரை உலுக்கிய போதுதான் விவேக்கிற்கு அந்த வித்தியாசம் உறைத்தது.

உருவம் கனமில்லாமல் ஆடியது.

பொம்மை.

அது ஒரு நிஜமான மனிதனைப் போலவே தோற்றம் காட்டிய சோளக் கொல்லைப் பொம்மை. ஓவர்கோட்டை மாட்டித் தொப்பி வைத்து ஒரு நிஜமான உருவத்தைப் போலவே நிற்க வைத்திருந்தார்கள். கையில் நீளமான தடி.

விவேக் திகைப்பாய் நின்று கொண்டிருந்த அதே விநாடி —

பின்பக்கம் அந்தச் சத்தம் கேட்டது.

''தட்...தட்...'' யாரோ படிகளில் ஏறி வரும் சத்தம்.

திரும்பினான்.

வாட்ச்மேனின் தலை தெரிந்தது. சிறிது பயமான குரலில் கேட்டான். ''என்ன ஸார் ஆள் யாராவது இருக்காங்களா?''

''இங்கே வா...'' விவேக் கூப்பிடப் போர்வையை இழுத்துப் போர்த்திக் கொண்டு அவன் மெதுவாய் நடந்து வந்து அருகில் நின்றான்.

விவேக் பொம்மையைக் காட்டிக் கேட்டான். ''இது எத்தனை நாளா இங்கே இருக்கு?''

''திருஷ்டிப் பொம்மைதானே...? இன்னிக்குக் காலையில்தான் கொண்டு வந்து வெச்சாங்க ஸார்.''

''இந்தக் கட்டடம் கட்ட ஆரம்பிச்சு இப்போ எத்தனை மாசம் இருக்கும்?''

''கிட்டத்தட்ட ஒரு வருஷமாகப் போகுது ஸார்.''

''கடந்த ஒரு வருஷ காலமா திருஷ்டி பொம்மையை வெக்காதவங்க, இன்னிக்கு மாத்திரம் திடீர்ன்னு வெக்க வேண்டிய அவசியம் என்ன...?''

''எனக்குத் தெரியலை ஸார்.''

''பத்து நிமிஷத்துக்கு முந்தி இந்த இடத்துல கையில் துப்பாக்கியோட ஒருத்தன் நின்னுட்டிருந்ததைப் பார்த்தேன். அவன் உனக்குத் தெரியாமே மேலே வந்திருக்க முடியாது. யாரவன்...?''

பயப்படாமல் வாட்ச்மேன் சிரித்தான்.

''என்ன ஸார் நீங்க? எனக்குத் தெரியாமே மேலே யார் ஸார் வர முடியும்? இந்த திருஷ்டி பொம்மையைத்தான் பார்த்திருப்பீங்க. அது கையில இருக்கிற கம்பைத் துப்பாக்கியா நினைச்சுப் பார்த்திருப்பீங்க!''

அவன் சொல்லிக் கொண்டிருக்கும் போதே —

கீழே ஆறாவது மாடியில் ஏதோ சத்தம் கேட்டது. செங்கல் குவியல் சரிகிற சத்தம்.

விவேக் சரேலென்று நிமிர்ந்து எதிரே நின்றிருந்த வாட்ச்மேனைத் தள்ளிக் கொண்டு மாடிப் படிகளை நோக்கி ஓடினான்.

''தப்...தப்...தப்...''

கான்க்ரீட் கம்பிகளைப் பிடித்துக் கொண்டு, படிகளில் உயரம் இழந்த போது, ஐந்தாவது மாடியின் மூங்கில் கம்புகளைப் பிடித்துக் கொண்டு அந்த உருவம் சரசர வென்று கீழே இறங்கிக் கொண்டிருப்பது தெரிந்தது. தலையில் ஹார்ஸ் ரைடிங் தொப்பி.

விவேக் தன் கையிலிருந்த ரிவால்வரைத் தாழ்த்திக் குறி வைக்க முயன்று தோற்றான். அவன் மூங்கில் கம்புகளுக்கு மத்தியில் விநாடிக்கும் குறைவான நேரத்தில் தெரிந்து தெரிந்து மறைந்தான்.

'சுடுவது பிரயோஜனமில்லை.'

'ஆறு தோட்டாக்களும் வீணாகி விடும்.'

விவேக் சரசரவென்று கீழே இறங்கினான். இருட்டில் படிகள் கண்களை ஏமாற்ற இரண்டு தடவை கால் இடறிக் கீழே விழப் பார்த்தான். செங்கற்கள் சிதறின.

அந்த உருவம் இப்போது மூன்றாவது மாடியில் ஓடிக் கொண்டிருந்தது. ஒரு கறுப்புக் காகிதம் காற்றில் பறக்கிற மாதிரி அபாரமான வேகம். விவேக் யோசித்தான்.

'இவனைப் பிடிக்க முடியுமா?'



அமைச்சர்: அரசே! இளவரசர் சரியான சினிமாப் பைத்தியம் என்பது எல்லோருக்கும் தெரிந்து விட்டது.

அரசர்: என்ன ஆயிற்று அமைச்சரே?

அமைச்சர்: நீங்கள் ஊரிலில்லாத போது அவரை, 'நாட்டில் மாதம் மும்மாரி பொழிகிறதா?' என்று அவையில் கேட்கச் சொன்னால், அவரோ, 'தியேட்டர்களில் தினம் மூன்று காட்சிகள் நடக்கிறதா' என்று கேட்டு மானத்தை வாங்கி விட்டார்!

— ஆர். ரகோத்தமன்.



# இராம மந்திரம்



'ராமா' என்ற மந்திரத்தின் பொருள் மகிழ்விப்பவன் என்பதாகும். ராம மந்திரத்தை உச்சரிக்கும்பொழுது உள்ளிருக்கும் ஆனந்தத்தை மறைத்துக் கொண்டிருக்கும் திரை விலகுகிறது. உள்ளிருக்கும் ஆனந்தம் அப்பொழுது தங்குதடையின்றி வெளிப்படுகின்றது. சதா மகிழ்வுற்றிருப்பது யோகத்தின் பாங்கு ஆகும். ராம மந்திரத்தை உச்சரித்தால் ஒருவன் யோகி ஆகலாம். அப்படி ராம மந்திரத்தை உச்சரித்து வால்மீகி என்னும் மஹரிஷி யோகியானார்.

தாரக மந்திரம் என்று சொல்லப்படும் ராம மந்திரத்தைச் சிவனார் இடைவிடாது உச்சரித்து வருகிறார்.

ஸ்ரீ ராமகிருஷ்ணர் காசிக்கு சென்றிருந்தார். அங்கு அவர் ஞானக் காட்சியில் இவ்வுண்மையைக் கண்டார். காசியில் உடலை உகுக்கின்றவர்களுக்கு முக்திக்கு இடைஞ்சலாக இருக்கும் கர்மத்தை மாதா அன்னபூரணி ஒதுக்கி வைக்கின்றனர். காசியில் உடலை உகுக்கும் ஜீவனுடைய காதில் சிவனார் ராம மந்திரத்தை ஜீவன் வாங்கிக் கொண்டு கிரம முக்திக்கு போகின்றான்.

கந்த புராணத்தில் காசி காண்டத்தில் சொல்லப்பட்டுள்ள இந்நிகழ்ச்சி ஸ்ரீ ராமகிருஷ்ணருக்கு ஞானக் காட்சியாக தென்பட்டது.

சிவனார் ஓதும் மந்திரம் ராம என்னும் தாரகப் பிரம்மமாகும். அது எத்தகையது. அது சிவனாருடைய சொருபமேயாகும். சிவனாருடைய சொரூபத்திற்கு அது புறம்பானதன்று. ஹரா என்பது சிவன் அம்சம். உமா என்பது அம்பிகையின் அம்சம். சிவ சக்தியாகப் பிரிக்க முடியா அர்த்தநாரீசுவரராகச் சிவன் இருக்கின்றார். மராமரா என்று சொன்னது எப்படி ராம என்று ஆனதோ அப்படி ஹரா உமா, ஹரா உமா, ஹரா உமா என்று சதா சொல்லிக்கொண்டே இருந்தால் அது ராம என்னும் மந்திரம் அமைந்திருக்கின்றது.

எனவே, ராம என்னும் மந்திரம் தசரதுடைய காலத்தில் வந்ததன்று. அது அனாதி. சதா இயற்கையில் பிரணவத்தினுடைய அம்சமாக பிரம்மமாக இந்த ஓசை இருந்து கொண்டிருக்கிறது.

ஆதாரம்: தர்மச்சக்கரம்

---

ரேணுகா டிஸ்டிரிபியூட்டர்ஸ்
வழங்கும்

கலைப்புலி சேகரனின்

# காவல் பூனைகள்

4 TRACKS STEREOPHONIC-SCOPE

தமிழ் திரையுலகில் முதன்முதலாக
'4 TRACKS ஸ்டீரியோபோனிக்'
ஒலி அமைப்புடன்

கதை, திரைக்கதை, வசனம், டைரக்ஷன்

கலைப்புலி சேகரன்

சங்கீதராஜன் ரவீந்திரன்

G.சாமண்டீஸ்வரி

'சாத்தியமில்லை. நாம் தரையைத் தொடுவதற்குள் இவன் ஏதாவது ஒரு வாகனத்தில் பறந்து விடலாம்.'

'ஹோட்டலுக்கு முன்புறம் இருக்கும் போலீஸ் செக்யூரிடியை உசுப்ப வேண்டுமென்றால் ரிவால்வரைக் கனைக்கச் செய்ய வேண்டியது அவசியம்.'

விவேக் ரிவால்வரை உயர்த்தி, வெற்று வெளியைப் பார்த்துச் சுட்டான்.

''ட்டுமீல்...'' காற்றைக் கூர் சீவிக் கொண்டு தோட்டா பாய்ந்தது. நிசப்தமான அந்தச் சுற்றுப் பிரதேசம் சத்தத்தை எதிரொலித்து விட்டு மறுபடியும் நிசப்தத்தில் விழ, விவேக் மாடிப் படிகளை இரண்டிரண்டாய்த் தாவிக் கீழே வந்தான். அதே விநாடி —

மோட்டார் பைக்கொன்று கட்டடத்தின் பின் பகுதியிலிருந்து பீறிக் கொண்டு போகும் சத்தம் கேட்டது. தொலைவில் ஹோட்டலின் வெளிச்சமான முன்பக்கத்திலிருந்து, பிரகாசமான ஹெட்லைட் வெளிச்சங்களோடு ஜீப் பாய்ந்து வந்தது.

விவேக் அதை நோக்கி ஓடினான்.

செக்யூரிடி 'ஜீப்' விவேக்கை அடையாளம் கண்டு கொண்டு, கீச்சிட்டு நிற்க அவன் ஜீப்புக்குள் தாவினான். கத்தினான்.

''கோ ஸ்ட்ரெயிட் அண்ட் சேஸ் ஹிம்...''

ஜீப்பின் முன் பக்கத்தில் உட்கார்ந்திருந்த செக்யூரிடி கார்ட் திரும்பிப் பார்த்துக் கேட்டார். 'வாட் ஹேப்பண்ட் ஸார்?'

விவேக், நடந்ததை அவசரமாய்ச் சுருக்கமாய்ச் சொன்னான். ஜீப் வேகம் எடுத்துக் காற்றை அரைத்தது. அந்த நீண்ட ரோட்டின் வளைவைத் திரும்பியதுமே, தொலைவில் ரத்தப் பொட்டு மாதிரி அந்தச் சிவப்பு விளக்கு தெரிந்தது.

''இட் ஷுட் பி..'' விவேக் கத்தினான்.

போக்குவரத்து பலஹீனமான ரோடு அது. ஜீப் டிரைவர் ஆக்ஸிலேட்டரை முழு அளவில் உபயோகப்படுத்த ஜீப் நிஜமாகவே பறந்தது. செக்யூரிடி கார்டு கேட்டார்.

''ஆளைப் பார்த்தீர்களா ஸார்?''

''இல்லை.''

''எல்லாமே இருட்டில்தான் நடந்தது.''

''ஆமாம்! கட்டடத்தின் உச்சியில் திருஷ்டிப் பொம்மையை நிற்க வைத்து, அதன் பின்னால் நின்று, டெலஸ்கோப்பிக் ரைஃபிளை உபயோகப்படுத்தி, விளையாட்டு வீரர்களில் யாரையாவது ஒருவரைத் தீர்க்க நினைத்திருக்கிறார்கள் அந்த இந்தியக் கழுகுகள். நான் பார்த்து விட்டேன்.''

''வாட்ச்மேன் அதற்கு உதவியிருக்கலாம்.''

''மே...பி..''

அந்த பைக் இப்போது ஜுஹு பீச் ரோட்டில் தலைதெறிக்கிற வேகத்தில் போய்க் கொண்டிருந்தது.

''சரியான வேகம்.''

''பிடித்து விடலாம்.''

தூரத்தில் மேலும் சில நிமிஷங்கள் கழிய —

தொலைவில் சாந்தாக்ரூஸ் ஏர்போர்ட் வெளிச்சமாய்த் தெரிந்தது. ''ஆசாமி ஏர்—போர்ட்டுக்குத்தான் போகிறான். சுலபமாய் மடக்கி விடலாம் ஸார்...'' செக்யூரிடி கார்டு சந்தோஷமாய்ச் சொன்னார்.

ஏர்போர்ட் நெருங்கியது.

வரிசையான கார்களுக்கு மத்தியில் அவன் பைக்கைச் சொருகி நிறுத்தி விட்டு லௌன்ச்சுக்குள் ஓட, விவேக்கும் செக்யூரிடி கார்டும் ஜீப்பினின்றும் இறங்கி அவனைத் தொடர்ந்தார்கள். ஜெர்கின் கோட்டும் தொப்பியும் அவனை மூடியிருந்தது. சாயம் போன ஜீன்ஸ் பேண்ட்.

லௌன்ஞ்சில் கும்பல் குறைவாயிருந்தது. ரன்வேயில் விமானம் ஒன்று பயணிகளை விழுங்கிக் கொண்டிருக்க, ஸ்பீக்கரில் அனௌன்ஸ்மெண்ட் கசிந்தது.

தலையில் தொப்பி அணிந்த அந்த பைக் ஆசாமி ரிசப்ஷன் கௌண்டரில் பதற்றமாய் ஏதோ கேட்டுக் கொண்டிருந்தான். விவேக் வேக வேகமாய் நடந்து போய், அவனுடைய முதுகைத் தொட்டான்.

''எக்ஸ்க்யூஸ்மீ...''

அவன் திரும்பினான். குரல் கொடுத்துக் கொண்டே.

''எஸ்...''

இனிமையான பெண் குரலைக் கேட்டு, விவேக் அதிர்ந்தான். உற்றுப் பார்த்தான். தொப்பிக்குக் கீழே தெரிந்த அந்தப் பெரிய கண்களும், வழுவழுப்பான மேலுதடுகளும், மோவாயும், ஒரு பெண்ணுக்கு மட்டுமே உரித்தானவை என்று சொல்ல, ஜெர்கின் கோட் அணிந்த மார்புப் பகுதி சத்தியம் செய்தது பெண்தான்.

(தொடரும்)



## அடுத்த இதழில்

# பெண்களை இழிவு செய்யும் கொடுமை!

— கல்லூரி மாணவிகள் கருத்தரங்கம்

# நம்பிக்கை

"என்ன செல்வராஜ், இன்னிக்கு உன் வலி எப்படியிருக்கு? கொஞ்சம் தேவலையா, இல்லே டாக்டர் கிட்ட அழைச்சிட்டுப் போகட்டுமா?"

"வேணாம் ஸார். நேத்து ராத்திரி போய் மந்திரிச்சுக்கிட்டு வந்தேன். இப்ப ஒரு மாதிரியா இருக்கு. இன்னும் ரெண்டு வாட்டி போய்ட்டு வந்துட்டா நல்லா ஆயிடும்."



சர்வ நிச்சயமாய்ப் பேசியவனை யோசனையோடு பார்த்தேன். பத்து நாட்களுக்கு முன் தோட்டத்துச் செடிகளுக்கு வார்க்க நீர் நிறைந்த வாளியைத் தூக்கி வரும் போது அவன் கால் நொடித்துக் கீழே விழுந்து விட்டான். அது முதல் காலில் நோவு. தாங்கித் தாங்கி நடந்தான். ஏதாவது எலும்பு முறிவோ அல்லது எலும்பில் ஒரு கீறலோ ஆகியிருந்தால் கூட உடனே பார்த்து விடுவது நல்லது என்ற எண்ணத்தில் நான் திரும்பத் திரும்ப அவனை டாக்டரிடம் போக அழைத்தேன். அவன் கேட்கவில்லை.

"அதெல்லாம் வேணாம் ஸார். கீழே விழுந்ததில் சுளுக்கிக்கிட்டிருக்கு. அவ்வளவு தான். ரெண்டு நாள்ல சரியாய்ப் பூடும்" என்று சொல்லி விட்டான். எனினும் தொடர்ந்து நாட்கணக்காய் நொண்டியவனைப் பார்க்கப் பார்க்க எனக்குப் பயம் மிகுந்தது.

"எதுக்கும் டாக்டர்கிட்டே காட்டிடலாம் செல்வராஜ். எதுவும் கெடுதலில்லேன்னா அவர் பார்த்துச் சொல்லிடட்டுமே! நமக்கும் நிம்மதியாயிடுமில்ல? லேசான முறிவு ஏதானும் இருந்தா உடனே வைத்தியம் செஞ்சு சரிப்படுத்திடலாம். முறிவோடயே நடந்துக்கிட்டிருந்தா அப்புறம் மோசமாகி உனக்குத்தான் கஷ்டம். நீ பைசாக் காசு தர வேணாம். எனக்குத் தெரிஞ்ச டாக்டர் கிட்டே என் செலவில் அழைச்சிட்டுப் போறேன்."

"அதெல்லாம் வேணாம் ஸார். முறிவு கிறிவு எல்லாம் எனக்கு வராது. எ ங் க



வம்சத்திலேயே கிடையாது. வெறும் சுளுக்குத்தான்'' என்றான் வலியில் நெற்றி சுருங்க.

''அந்த சுளுக்குக்குத்தான் டாக்டர் மருந்து கொடுக்கட்டுமே.''

''சுளுக்குக்குப் போய் மருந்து எதுக்கு ஸார்? மந்திரிச்சா யாருக்கு வந்ததுன்னு பஞ்சாப் பறந்துடாதா!''

இதென்னப்பா பைத்தியக்கார நம்பிக்கை! கடைசியில் அதையேதான் செய்து கொண்டு வந்திருக்கிறானா?

''மந்திரிச்சுக்கிட்டியா!'' என்று அர்த்தமில்லாமல் அவன் வார்த்தையை எதிரொலித்தேன்.

''ராத்திரி வூட்டுக்குப் போனேனா? நோவு தாளலே. தற்செயலா என் சகலை வந்தாரு என்னைப் பார்க்க. விஷயம் தெரிஞ்சதும் 'வீணா ஏன் கஷ்டப்படறீங்க? எனக்கு ஒரு வயசான ஆச்சியைத் தெரியும், நல்லா மந்திரிச்சுச் சுளுக்கை எடுத்துடுவாங்க' அப்படின்னு சொல்லி அந்த ஆச்சிகிட்ட அழைச்சிட்டுப் போனாரு. சும்மா சொல்லக் கூடாது ஸார், ஆச்சி பலே ஆளுதான். விபூதி குடுத்து மந்திரம் சொல்லிக் கரண்டியால் சுளுக்கு மேல தடவித் தடவி இறக்கி விட்டாங்க. இன்னும் ரெண்டு தபா இப்படியே செஞ்சா முழுக்கச் சரியாயிடும்னாங்க. இப்பவே பாருங்க, கொஞ்சம் தேவலாம்!'' என்று பத்தடி குறுக்கும் நெடுக்கும் நடந்து காட்டினான் செல்வராஜ். நடையில் ஏதும் வித்தியாசம் இருப்பதாய் எனக்குத் தெரியவில்லை. ஆனால் அவன் முகம் சுளிக்காமல் நடந்தான். நோவு போய் விடும் என்ற நம்பிக்கையால் நோவு தெரியவில்லையோ அல்லது அவன்தான் காட்டிக் கொள்ளவில்லையோ?

அடுத்த இரண்டு நாட்கள் அவன் தொடர்ந்து 'மந்திரித்து'க் கொண்டான். அதன் பின் இரண்டு மூன்று நாட்களில் இயல்பாய் நடக்கத் தொடங்கி விட்டான்.

''பைத்தியக்கார நம்பிக்கைன்னு சொன்னீங்களே! இப்ப பாருங்க, கை மேல் பலன். மந்திரம் மாயம் எல்லாம் உலகத்தில் இருக்கு ஸார்!'' என்று என்னை மட்டம் தட்டி விட்ட திருப்தியுடன் உற்சாகமாய்ப் பேசினான் செல்வராஜ். எலும்பில் சேதம் ஏதும் நேர்ந்திருக்கவில்லை என்பதைப் புரிந்து கொண்டேன். கீழே விழுந்த அதிர்ச்சியில் விளைந்த மேலோட்டமான தசை நோவுதான். தானாகவே இரண்டு வாரங்களில் சரியாகிவிட்டிருக்கிறது. ஆனால் இதைச் சொல்லி செல்வராஜை நம்ப வைக்க முடியாது என்று எனக்குத் தெரியும்.

''சரி செல்வராஜ். உனக்குச் சரியாய்ப் போயிடிச்சுன்ற வரைக்கும் எனக்கும் சந்தோஷம்தான். ஒரு வேலை செய்யணுமே நீ? மெயின் ரோட்ல என் நண்பர் ராமநாதன் இருக்காரில்ல? எனக்காக ரெண்டு செம்பருத்திச் செடி வச்சிருக்கிறதாய்ச் சொன்னார். நாளைக்கு நீ போய் வாங்கிக்கிட்டு வந்துடறயா?''

''ஓ. அதுக்கென்ன ஸார். வாங்கிட்டு வந்துடறேன்.''

**என்** பெற்றோரும் என் மனைவியும் நானும் வசிக்கும் இந்தப் புரசவாக்கத்துச் சிறு வீட்டில் செல்வராஜ் தோட்டக்காரனாக இருந்தான். வீட்டுக்கு முன்பும் பக்கவாட்டிலும் இருந்த வெற்றிடத்தைப் பதப்படுத்தி உரமிட்டுப் பூக்களும் செடிகளும் வளர்க்க வேண்டுமென்ற என் ஆசையைச் செயலாக்கியவன் அவன்தான். அவனுக்குப் 'பசிய விரல்கள்'. அவன் ஆற்றல் என் மகிழ்ச்சியாய் மலர்ந்தது. எந்தப் புதிய விதையோ பகங்கன்றோ நர்ஸரியிலிருந்து கொண்டு வந்து அவனிடம் தந்து விதிமுறைகளைச் சொன்னாலும் நொடியில் கிரகித்துக் கொள்வான். வேரும் உரமும் பதியனும் பேசிய மொழி அவனுக்குத் தாய்மொழியாக இருந்தது. விரைவிலேயே வர்ணமும் நறுமணமுமாக என் வீட்டைச் சுற்றி ஓர் ஒளி வட்டம் படைத்து விட்டான். அலுவலகத்திலிருந்து மாலையில் நான் வீடு திரும்பும் போது குடும்பத்தினரின் அன்பு முகங்களுக்கும் முன்பாகப் பட்டு ரோஜாவும் குண்டு மல்லியும் என்னை இனிமையாய் வரவேற்கும்.

ஆனால், செடிகள் விஷயத்தில் என் பேச்சை அப்படியே ஏற்றுக் கடைப்பிடிக்கும் செல்வராஜை என் பகுத்தறிவு வாதம் எள்ளளவும் அசைக்கவில்லை.

முன்பொரு சமயம் ஒருநாள் உத்தியோகத் தொடர்பாய் நான் இரண்டு நாட்கள் மதுரைக்குப் போக வேண்டியிருந்தது. என் தகப்பனாருக்கு மிகுந்த தள்ளாமை. அதில் விளைந்த ஒருவித பலவீன உணர்வு.

''நீ திரும்பற வரைக்கும் வீட்டில் நானும் ரெண்டு பொம்புளைங்களும்தான். ராத்திரியில் கூப்பிட்ட குரலுக்கு ஓர் ஆண் துணை இருந்தா நல்லதுன்னு நினைக்கறேன்டா. செல்வராஜை ரெண்டு நாள் ராத்திரி இங்கே வந்து படுத்துக்கச் சொல்றயா?'' என்றார் என்னிடம். செல்வராஜை நான் கேட்ட போது ''பெரியவருக்கு இது கூடச் செய்ய மாட்டேனா ஸார்?'' என்று ஒப்புக் கொண்டான்.

நான் மதுரையிலிருந்து திரும்பிய அன்று மாலை செல்வராஜ் கண்களை அகல விரித்தபடி மெல்ல என்னைத் தனிமையில் அணுகி, செய்தி கனக்கும் குரலில் ''ஸார், ஒரு விஷயம்'' என்றான்.

''என்ன?''

இன்னும் ஓர் அடி நெருங்கி வந்தான். இன்னும் தாழ்ந்த குரலில் சொன்னான்: ''இந்த வீட்ல ஆவி உலாத்துது ஸார்!''

''உன் பைத்தியக்காரத்தனத்துக்கு எல்லையே கிடையாதா?'' என்று வெடித்தேன்.

''பைத்தியக்காரத்தனம் இல்லே ஸார்!

ஆர். சூடாமணி

## 'நீரில் மிதக்கும் நிலா' நெஞ்சில் மிதக்கிறது...



* கபாவின் ''நீரில் மிதக்கும் நிலா'' இருபத்து நான்கு வாரங்கள் போனதே தெரியவில்லை. ஷில்பாவும் பிருத்விராஜும் மறக்க முடியாத பாத்திரங்கள். கதை என் இதயத்தில் இன்னும் மிதந்து கொண்டிருக்கிறது.

வண்ணை கணேசன். சென்னை—23.

* கல்கியின் தயாரிப்பில் வெளிவந்த 'நீரில் மிதக்கும் நிலா' இருபத்து நான்கு வாரங்கள் வாசகர்களின் நெஞ்ச அரங்குகளில் வெற்றிகரமாக ஓடி வெள்ளி விழாக் கொண்டாடியது என்பதை நினைக்கையில் நெஞ்சு சந்தோஷத்தில் மிதக்கிறது.

மேல்பட்டி. (வ.ஆ.) எல். மாறன்.

* சாதாரணமாகப் போய்க் கொண்டிருந்த கதை, எதிர்பாராத திருப்பங்களுடன் முடிவடைந்ததும், மதுமதியின் சாவும் சிவா உயிரோடு இருந்ததும் மனத்திற்கு நிறைவைத் தந்தன.

தஞ்சை. வி. வனஜா.

* நாயகன் பிருத்விராஜை யாரும் மறந்து விட முடியாது. அவனுடைய இலட்சியம், உழைப்பு, ஷில்பாவால் ஏற்பட்ட ஏமாற்றம் அனைத்தையும் கண்முன்னே நிலை நிறுத்தியது எழுத்தாளரின் நடை மட்டுமல்ல; மாருதியின் உணர்ச்சிகரமான, பாவங்கள் நிரம்பிய சித்திரங்களும்தான்.

நெல்லை. என். பெனிட்டோ குமார்.

* நல்ல விறுவிறுப்புடன், தெளிவான நடையுடன் கதையைக் கொண்டு சென்றது, மனத்தைக் கவர்ந்தது. சினிமாக் கதைதான் எனினும் ''சினிமாத்தனமாய்'' இல்லாமல் இருந்ததும், 'சுபா'வுக்கு பிளஸ் பாயிண்ட்.

விருத்தாசலம். கி. குருராஜன்.

* 'நீரில் மிதக்கும் நிலா' அருமையான கதை. சினிமாவில் கிடைக்கும் பணம், புகழ் முதலியன, ஒவ்வொரு மனிதனின் வாழ்க்கையையும் எந்தளவிற்கு மாற்றி விடுகிறது என்பதை சுபாவைத் தவிர வேறு யாராலும் இவ்வளவு அருமையாக விளக்க முடியாது. கதையில் அதிகமான கதாபாத்திரங்கள் இருந்தாலும் குழப்பமில்லாமல் ஒவ்வொரு கேரக்டரும் மனத்தில் நிற்கும் வண்ணம் தொடர் கதையை அளித்த கதாசிரியருக்கு எனது பாராட்டுகள். ஒவ்வொரு வாரமும் ஓவியர் மாருதியின் படங்கள் கண்ணில் ஒற்றி எடுக்கும் அளவிற்கு இருந்தன.

தக்கோலம். ஆ. புகாரி.

நடந்ததைக் கேளுங்க. இங்கே துணைக்கு ரெண்டு நாள் ராத்திரி வந்து படுத்துக்கிட்டேன் இல்லையா? வாசல் வராந்தாவில் நான் படுத்திருந்தேன். ரெண்டாம் ராத்திரி—அதான், நேத்து ராத்திரி — பன்னிரண்டு மணி இருக்குமா? இல்லே, ஒண்ணு ஒண்ணரை கூட இருக்கும் — நல்ல தூக்கத்தில திடீர்னு... இப்ப சொல்றபோது கூட என் கையில் எப்படி முள்ளுக் குத்தி நிக்குது பாருங்க ஸார்!''

''சரி சரி, விஷயத்துக்கு வா.''

''திடீர்னு யாரோ என் மார் மேல உக்காந்து கழுத்தைப் பிடிச்சு நெரிக்கிற மாதிரி இருந்துச்சு... கொஞ்சம் கொஞ்சமா அழுத்தறாங்க. அழுத்தி உலுக்கறாங்க... ஐயோ அப்பான்னு அலறியடிச்சுக்கிட்டுக் கண் முழிச்சு எழுந்து உக்காந்துட்டேன்.. கை காலெல்லாம் வெடவெடன்னு நடுங்கி ஒரேயடியா வேர்க்குது. முள்ளு முள்ளா மயிர்க்கா நிக்குது உடம்பு பூரா(ச்)சூடும்...''

''அப்புறம் ஆவியோட பொழுது போக்காய்ப் பேசிக்கிட்டிருந்தியா?''

''நக்கல் பண்ணாதீங்க ஸார்! ஆவின்னா விளையாட்டில்ல. நான் கண்ணைத் தொறக்கறேன், குடுகுடுன்னு என் பக்கத்திலேர்ந்து ஓர் உருவம் வேகமா ஓடுது... வெள்ளையா ஓர் உருவம்... ஆணா பெண்ணா தெரியல, காத்து மாதிரி தெளிவில்லாம ஓர் உருவம் ஓடிப் போய் அந்தோ அந்தத் தென்னை மரத்து மேல் ஏறி உக்காந்திடிச்சு...''

''உக்காரும் உக்காரும். வெள்ளை டிரஸ் ஆவியில்ல! நிறைய சினிமா பார்ப்பியாக்கும். சினிமாவில் எல்லாம் வெள்ளை டிரஸ் ஆவி பாட்டுக் கூடப் பாடுமே! இந்த ஆவி பாடிச்சா?''

என்னைக் கோபத்துடன் விழித்துப் பார்த்து விட்டு அவன் அகன்றான். அரைத் தூக்கத்தில் ஏதோ கனவு கண்டிருப்பான் போல் இருக்கிறது. கண் திறந்த நேரத்தில் தெருவில் யாராவது வெள்ளை உடையில் நடந்து போயிருக்கலாம். எல்லாமாகச் சேர்ந்து ஒரு பயக் குழப்பம். குழம்பிய மூளையின் பிரமைகள்.

நல்ல ஆள்!

இப்படி எத்தனையோ நிகழ்ச்சிகள்.

''செல்வராஜ்! ராமநாதன் வீட்டிலேருந்து அந்தச் செடிகளை வாங்கி வந்திட்டியா?''

''அடடா! மறந்தே போய்ட்டேன் ஸார்!''

''என்னப்பா இது! உன்கிட்ட சொல்லி எத்தனை நாளாகுது!''

''நாளைக்கு வாங்கிக்கிட்டு வந்துடறேன் ஸார்.''

மறுநாள் அவன் வேலைக்கே வரவில்லை. அதற்கு அடுத்த நாள் மாலை நான் வீடு திரும்பிய போது அவன் வந்து போய் விட்டதாக என் மனைவி சொன்னாள். வீட்டின் முன்புறமாய் இருந்த கானாச் செடிகளுக்குத் தண்ணீர் ஊற்றியிருந்த சுவடு

தெரிந்தது. சற்றுத் தள்ளியிருந்த செடிகளின் கீழெல்லாம் மண் காய்ந்து கிடந்தது. குரோட்டன்களுக்கு வேண்டுமானால் அன்றாடம் நீர் ஊற்றத் தேவையில்லை. ஆனால் ரோஜாவும் சாமந்தியும் நீரின்றி வாடிப் போய்க் கொண்டிருந்தன. மல்லிகைக் கொடியின் கீழே எப்போதோ உதிர்ந்திருந்த பூக்கள் அகற்றப்படாமல் அப்படியே பழுப்பாய்க் கிடந்தன.

தொடர்ந்து சில நாட்கள் கவனித்ததில், அவன் வேலையின் தரம் குறைந்து போய் விட்டதைக் காண முடிந்தது. தோட்டத்தை அவன் சரிவரக் கவனிப்பதில்லை. செடிகளுக்கு ஒழுங்காய்த் தண்ணீர் ஊற்றுவதில்லை. வேலைக்குத் தாமதமாய் வருவதும் சீக்கிரம் சென்று விடுவதும் அடிக்கடி நிகழ்ந்தது. வேலை செய்ய வணங்காமல் சாக்குப் போக்குச் சொல்லி விட்டுத் தெருக் கோடியில் சகாக்களுடன் வம்படித்துக் கொண்டு நிற்பது வழக்கமாகிக் கொண்டு வந்தது.

பிறகு ஒருநாள் ''என்ன செல்வராஜ், செடிகளை இன்னிக்காவது வாங்கிக்கிட்டு வந்தியா?'' என்றேன், ரோஜாக்களை அடுத்திருந்த புல் தரையில் புல் சீராய் வெட்டப் படாமல் தாறுமாறாய் நிற்பதைப் பார்த்துக் கொண்டே.

''வரணும்னுதான் ஸார் இருந்தேன். என்னமோ தெரியலே, மதியத்திலேருந்து ஒரே தலை நோவு. வீட்டுக்குப் போய் அமிர்தாஞ்சனம் தடவிக்கிட்டுப் படுக்கலாம்னு பார்க்கறேன். மன்னிச்சுக்குங்க. நாளைக்கு எப்படியும் வாங்கிட்டு வந்துடறேன்.''

''சௌகரியம் போல் செய். அப்புறம் செல்வராஜ், ஒரு வேடிக்கையான விஷயம்...''

அவன் கிளம்பிக் கொண்டே ''என்ன ஸார்?'' என்றான்.

''இங்கே முந்தி ஒரு தரம் நீ வாசல்ல படுத்திருந்தப்ப ராத்திரி ஒரு ஆவி வந்துதுன்னு சொன்னியே, நினைவிருக்கா? நான் கூட நம்பலை பாரு? இப்பவும் எனக்கு நம்பத்தான் முடியலே, ஆனா... நேத்து ராத்திரி ஒரு விசித்திரமான அனுபவம் எனக்கு...''

போக எடுத்து வைத்த காலோடு பொறுமையிழந்து நின்றிருந்தவன் இப்போது சரேலென்று திரும்பி என்னைப் பார்த்துக் கண்களை விரித்தான். முகத்தில் ஓர் உன்னிப்பு எழும்பியது.

''என்ன... என்ன அனுபவம் ஸார்?''

''நேத்து ராத்திரி என் கனவில் ஒரு வெள்ளை உருவம் வந்துச்சு செல்வராஜ். நீ சொன்னியே, அதே மாதிரி உருவம். எனக்குத் தூக்கத்திலேயே உடம்பு முழுக்க வேர்த்து விட்டுடுச்சுன்னா பார்த்துக்கயேன்! அது ஒரு மாதிரி கரகரப்பான குரல்ல என்கிட்ட 'நான்தாண்டா இந்தத் தோட்டத்து அதி தேவதை. நீயோ வேறு யாராவதோ இந்தத் தோட்டத்தைச் சரியா பராமரிக்காம விட்டீங்கன்னா அது என்னைப் பட்டினி போடற மாதிரி ஆகும்.



# மழைத்துளிகள்

மழையினைக் கருவில் தாங்கும்
காரிருள் மேகக் கூட்டம்
மாரியாய் முழங்கிப் பொழியும்
மண்மகள் தாகம் தீர்க்கும்.
உலர்ந்திடும் செடி கொடிகள்
உவகையில் நடனம் ஆடும்.
துருவடைந்த கலப்பை தன்னைத்
தோளினில் தூக்கி உழவர்
துயில்கலைந்த எருதுக ளோடு
ஏரோட்டப் போன பின்னர்,
குட்டையாய்த் தேங்கி நிற்கும்
குளமதைப் போன்ற நீரில்
குழந்தைகள் குதித்துப் போடும்
கும்மாளம் விண்ணை எட்டும்.
வாய்க்காலாய் உடைந்து ஓடி
அருவியாய்ப் பொழியும் நீரில்
மண்ணின் மணமெல்லாம் காற்றில்
கலந்து மனம் கவரச் செய்யும்.
சிறகுகள் நனைத்துக் கொண்டு
சிற்றுடல் சிலிர்க்க வந்து
சிறியதோர் பறவை ஒன்று
சின்னதாய் இடத்தைத் தேடி
உத்திரத்தில் அமர்ந்து பின்னர்
உற்றுத்தான் அழகாய்ப் பார்க்கும்.

— தமிழக ஆளுனரின் ஆலோசகர் டாக்டர் அ. பத்மநாபன் எழுதிய மழைத் துளிகள் (Rain drops) என்ற ஆங்கிலக் கவிதைத் தொகுப்பிலிருந்து மழைத் துளிகள் என்ற கவிதையின் தமிழாக்கம்: இந்துமதி.




— ஆர். வசந்தகுமார்.

---

அவங்களை நான் சும்மா விட மாட்டேன்'னு சொல்லிச்சு செல்வராஜ். சொல்லிட்டு வாயைப் பெரிசா 'ஆ'ன்னு திறந்துக்கிட்டு யாரையோ முழுங்க வராப்பல வந்துது பாரேன், திடுக்குனு முழிச்சுக்கிட்டேன். ரொம்ப நேரம் உடம்பெல்லாம் கடகடன்னு ஆடிட்டிருந்தது. அப்புறம் நானே சிரிச்சுச் சமாளிச்சுக்கிட்டேன்னு வையேன்! ஆவி யாவது தேவதையாவது! எல்லாம் மூட நம்பிக்கை, இல்லையா செல்வராஜ்?''

அவன் பதில் பேசவில்லை. அப்படியே தரையில் உறைந்து உட்கார்ந்து விட்டான். முகம் வெளிறிப் போயிருந்தது.

''ஐயோ பாவம், நான் ஏதேதோ பேசி உன்னைத் தாமதப்படுத்திட்டேன், இல்லே? ஸாரி செல்வராஜ், நீ வீட்டுக்குக் கிளம்பு'' என்று நான் உள்ளே வந்தேன். நிதானமாய் டிபன் காப்பி முடித்துக் குடும்பத்தினருடன் பேசிக் கொண்டிருந்து விட்டு ஒரு மணி நேரம் கழித்து மறுபடியும் வாசல் பக்கம் வந்தேன்.

செல்வராஜ் தோட்டத்து மண்ணைக் கொத்திப் பள்ளம் தோண்டிக் கொண்டிருந் தான். அவன் அருகில் பெரிய பிளாஸ்டிக் உறைகளில் வேர் மண்ணோடு இரண்டு செம்பருத்திச் செடிகள் இருந்தன.

நான் எதுவும் கேட்குமுன் அவனே நிமிர்ந்து பார்த்து ''ராமநாதன் ஸார் வீட்டி லேர்ந்து செடிகளை வாங்கிக்கிட்டு வந்துட் டேன் ஸார்'' என்றான்.

''தலை நோவுன்னு சொன்னியே?''

''அதுக்குப் பார்த்தா செடிங்க கதி என்னாகும்?''

''என்கிட்டயும் அமிர்தாஞ்சனம் இருக்கு. தரவா?''

''எல்லாம் இந்த வேலைக்கு அப்புறம் தான்.'' பசிய விரல்கள் சுறுசுறுப்பாய்ப் பள்ளங்களில் மணலும் உரமும் இட்டுப் பதப்படுத்திக் கொண்டிருந்தன.

அதன் பின் செல்வராஜின் அக்கறை யான பராமரிப்பில் என் பூந்தோட்டம் எவ் விதக் குறை சொல்லவும் இடமின்றிச் செழித்து வளர்ந்தது.

இரண்டு மாதங்களுக்குப் பிறகு ஒரு காலைப் பொழுது நான் அலுவலகம் கிளம் பிக் கொண்டிருந்த சமயம் செல்வராஜ் திடீரென்று வந்து ''ஸார், அவசரமாய் ஒரு இருநூறு ரூபா தேவைப்படுது. கொடுத்து உதவினீங்கன்னா புண்ணியமாயிருக்கும். என் சம்பளத்தில் கொஞ்சங் கொஞ்சமாய்ப் பிடிச்சுக்குங்க'' என்றான்.

''என்னப்பா இது, ஆபீஸ் கிளம்பற நேரத்துல வந்து கேக்கறே! பணம் கொடுக் கறதானா கூட நாளைக்கு பாங்குக்குக் போய் எடுத்துட்டு வந்தாத்தான் முடியும்...'' கண்ணாடியைப் பார்த்துத் தலை சீவிக் கொண்டே கேட்டேன். ''இப்ப என்ன திமர்னு இருநூறு ரூபாய்க்குச் செலவு?''

''ஜோஸியருக்குக் கொடுக்கணுங்க.''

நான் திரும்பி நின்று அவனைப் பார்த் தேன். ''ஜோஸியரா?''

''வீட்ல பையனுக்கு அடிக்கடி உடம்பைப் படுத்துது. எனக்கு ஊரைச் சுத்திக் கடன் தொல்லை. ஒரு விவகாரத்தில் என் சக லைக்கும் எனக்கும் மனஸ்தாபம் வந்து இப்ப பேச்சு வார்த்தை கூடக் கிடையாது. அண்டை வீட்டுக்காரங்க ஏதானும் ஒண்ணு மாத்தி ஒண்ணு சாக்கு வச்சு எங்க கூட தகராறு பண்ணிக்கிட்டே இருக்காங்க. இப்படி எதுவுமே சரியாயில்லையே, ஏதாச் சும் போதாத காலமாய் இருக்குமோன்னு நெனச்சு ஒரு ஜோஸியர்கிட்ட போனேன். பத்து ரூபாய்க்கு நல்லா ஜோஸியம் சொல் றாரு ஸார்! என் பேரையும் ராசியையும் கேட்டு ஏதோ கணக்குப் போட்டே விஷ யத்தை விலாவாரியாச் சொல்லிட்டாரு. இப்ப எனக்குக் கடுமையான சனி தசை யாம். அந்த வேகம்தான் இப்படிக் காட்டு தாம். ஆனா பரிகாரம் செஞ்சா சரியாப் போயிடுமாம். பரிகாரச் சடங்குக்குத்தான் இருநூறு ரூபா ஆகுது. கொடுக்கறீங்களா ஸார்?''

உள்ளே ஆத்திரம் பீறி வர, 'இதெல்லாம் என்ன மூடநம்பிக்கை? ஜோஸியமாவது பரிகாரமாவது! எவனோ சோம்பேறி ஜோஸியன்கிற பேரில் உன் மாதிரி முட்டாள்களை ஏமாத்திப் பணம் பறிக் கறான்' என்ற சொற்கள் வாய் வரை குமுறி வர ''இதெல்லாம் என்ன மூடநம்பிக்கை செல்வராஜ்?'' என்று தொடங்கியவன் அடுத்த சொல் எழாமல் தடைப்பட்டு நிறுத் தினேன். என்னுள் நானே ஏற்படுத்திக் கொண்டு விட்ட ஒரு சரிவு முழு அர்த்தத் துடன் முகத்தில் அறைந்தது.

எனக்கு மூடநம்பிக்கைகள் இல்லை என்பது உண்மைதான். ஆனால் என் லாபத்துக்காக இவனுடைய — அதாவது இன்னொருவருடைய — மூடநம்பிக்கையை நான் பயன்படுத்திக் கொண்டு விடவில் லையா?

நான் குன்றிப் போனேன். என்னுள் மிக ஆழத்தில் ஒரு முழுமை, ஒரு நேர்மை, கறைப்பட்டுப் போயிருந்ததை உணர்ந்த போது அடி வயிறு சுருங்கியது.

## CORRESPONDENCE COURSE ON ENTREPRENEURIAL DEVELOPMENT

There is plenty of scope for small scale industries of various types. Many are keen to become small scale industrialists. However, to fulfill their aspiration, a certain degree of exposure to all the facets of establishing and running a small scale unit is necessary. Not everyone can find it convenient to attend a regular Entrepreneurial Training Programme. A Correspondence Course is an ideal thing for them.

"EMGEEBEE INDUSTRIAL ADVISORY AND MONITORING SERVICES PRIVATE LIMITED" (EIAMS), is an industrial consultancy having considerable experience in various types of training programmes. EIAMS is launching its correspondence course on "ENTREPRENEURIAL DEVELOPMENT" on the 1st March 1989.

The course will cover: Achievement Motivation and Project Planning; Management of Production, Finance, Inventory, Quality, Marketing and Personnel. The course materials for this specially structured syllabus will be in simple, lucid English.

This course will be useful to those:

- i. who are already Entrepreneurs
- ii. who aspire to become Entrepreneurs and
- iii. who want to take to employment in industry, as an induction programme into industry.

The duration of the course is six months and the fee is Rupees Five Hundred only.

For Prospectus and Application form please write to: EIAMS PVT. LTD., Post Box No.2916, Madras 600 004., by sending a self-addressed envelope with an uncrossed Postal Order for Rs. TEN (Non-refundable) in favour of EIAMS (P) LTD., on or before the 10th February, 1989.




# ஜோதிடம்

ஜோதிட ஆய்வாளர் K.S. ஐயர் தமிழ் கம்ப்யூட்டர் மூலம் மிகத் துல்லியமாக உடனுக்குடன் ஜாதகம் கணித்து கிரஹங்களின் நுணுக்கங்களை நன்கு ஆராய்ந்து சரியான பலன்களைச் சொல்லுகிறார். நேரிலோ தபால் மூலமாகவோ தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி

## "K.S. ஐயர்"

54, பீம்சேனா கார்டன் தெரு, ராயப்பேட்டை ஹைரோடு,
ஜம்மி பில்டிங் எதிரில், மைலாப்பூர், சென்னை - 600 004. Tel : 74036.

நேரம் 9 A.M. to 1 P.M. & 3 P.M. to 7 P.M.

(நேரில் சந்திக்கும் முன்பு தொலைபேசி மூலம் முன் பதிவு செய்து கொள்ளவும். ஆடியோ கேஸட் வேண்டுபவர்களுக்கு தபால் மூலம் அனுப்பப்படும்.)

Market Maker

# ஹிந்தி ஏகாதிபத்தியத்தின் எதிரி

தென் நாட்டின் மீது ஹிந்தியைத் திணிப்பது ஆபத்து' என்று, 1956 — இல் ஸி. ஆர். குரல் கொடுத்த போது, அவரது வடநாட்டு நண்பர்கள் பலர் ஏமாற்றமும் ஆச்சரியமும் அடைந்தனர். தென்னாட்டில் இருந்த காங்கிரஸ்காரர்களோ, ஸி. ஆர். தங்களை ஒரு தர்மசங்கடத்தில் ஆழ்த்துவதாகக் கருதினார்கள். ஏனெனில் ஸி. ஆரின் அன்றைய ஹிந்தி கண்டனங்கள், அன்று காங்கிரஸுக்கு முக்கிய எதிரியாகத் தென்னாட்டில் விளங்கிய தி. மு. க. வின் கொள்கையைப் போல் சிறிதளவு ஒலித்தன. மேலும், 1930 — ஆம் ஆண்டுகளில் பிடிவாதமாக ஹிந்தியைப் பள்ளிகளில் கற்பிக்கச் செய்த ஸி. ஆர்., எப்படி இன்று ஹிந்தியின் எதிரியானார்?' என்று காங்கிரஸ்காரர்கள் குழம்பினார்கள். ஆனால் ஸி. ஆர். தமது முந்தைய கருத்துக்களுக்குத் துரோகம் செய்து விடவில்லை. 'ஹிந்தியைக் கற்க விரும்பும் அனைவருக்கும் அதனைக் கற்பிக்க வசதிகள் செய்து தரப்பட வேண்டும்' என்றே இப்போதும் சொன்னார்.



° ராஜேந்திர பிரஸாத்: "ஜின்னா பாணியில் ஸி. ஆர்!"

அவர் எதிர்த்தது, நாட்டின் ஒரே ஆட்சி மொழியாக ஹிந்தி விளங்கும் என்ற கொள்கையைத்தான்.

பார்க்கப் போனால், அவர் மத்திய உள்துறை அமைச்சராக இருந்த போதே, 'இந்தக் கொள்கையைச் செயல்படுத்த முடியாது' என்று எச்சரித்து இருந்தார். தெற்கே மட்டுமின்றி, கிழக்கேயும் வடகிழக்கிலும் வாழும் மக்களிடம் மத்திய அரசு ஹிந்தியில் பேசினால், அது அர்த்தமாகாது. உதாரணமாகச் சென்னை வாழ் மக்களிடம் ஹிந்தியில் அச்சடித்த பாஸ்போர்ட் ஃபாரங்களையோ அல்லது டெலிஃபோன் பில்களையோ கொடுத்தால் அது அபத்தமாக இருக்கும். அதேபோல் புதுதில்லியிலிருந்தோ அல்லது லக்னோ, பாட்னாவிலிருந்தோ அரசுத்துறை ஊழியர்கள்; சென்னை, திருவனந்தபுரம் அல்லது ஷில்லாங்கிலுள்ள அரசு இலாகாக்களுக்கு ஹிந்தியில் கடிதங்கள் எழுதினால் ஒன்றும் புரியாது.

'ஹிந்தியை விட ஆங்கிலம் மேலான ஆட்சி மொழியாக விளங்கும்' என்று வாதாடினார் ஸி. ஆர். 'அதுமட்டுமல்ல, ஆங்கிலத்தை மத்திய — மாநிலத் தொடர்புக்கும், மாநிலங்களுக்கிடையே தொடர்புக்கும் பயன்படுத்துவதே அனைவருக்கும் சம நீதியும் சம வாய்ப்பும் அளிப்பதாகும்; ஹிந்தியைப் பயன்படுத்துவது, ஹிந்தி பேசும் மக்களுக்குச் சுலபமாவதுடன் அவர்களுக்கு உயர் அந்தஸ்து மனப்பான்மையும் அளிக்கும். ஹிந்தியைத் தாய் மொழியாகக் கொள்ளாத மக்களுக்கோ இரண்டாந்தரப் பிரஜை மனப்பான்மை உருவாகும். எனவே, ஆங்கிலம் காலவரையறை இன்றி ஆட்சிமொழியாக நீடிக்கும் என்று மத்திய அரசு அறிவித்து விட வேண்டும். அவ்வாறு அறிவிக்கா விட்டால் — ஹிந்தி மட்டுமே ஆட்சிமொழி என்ற லட்சியம் நீடிக்குமானால் — தென்னகம்

எதிர்ப்புத் தெரிவிப்பதுடன் நாட்டின் ஒருமைப்பாட்டில் பற்றுதலை இழக்கும்.'

**மொ**ழிவாரி மாநிலங்களை உருவாக்கியதும், அதனால் ஏற்பட்ட எல்லைப் பிரச்னைகளும் ஹிந்தியைத் திணிப்பதால் ஏற்படக்கூடிய விபரீதங்கள் பற்றிய வி. ஆரின் கவலைகளை அதிகரிக்கச் செய்தன. மாநிலங்களுக்கான புதிய எல்லைக் கோடுகள் அவருக்குக் கொஞ்சமும் பிடிக்கவில்லை. மகாராஷ்டிரத்துக்கு அநீதி இழைக்கப்பட்டிருப்பதாக அவர் கருதினார். பம்பாயை மகாராஷ்டிரத்துக்கு அளிப்பது பற்றி முதலில் ஆட்சேபணை இருந்தது. பின்னர், விருப்பமின்றியே விட்டுக் கொடுக்கப்பட்டது. முன்னர் தெலுங்கு ஜில்லாக்கள் பிரிந்து போனது போல், இப்போது சென்னை மாகாணத்தின் கன்னட, மலையாளப் பகுதிகள் துண்டாடப்பட்டதானது அவரை வருத்தத்துக்குள்ளாக்கியது. பல்வேறு மொழிகளைப் பேசுகிற, வெவ்வேறு கலாசாரங்களை உடைய மக்கள் ஒப்புரவுடன் வாழ்ந்து வந்ததே சென்னை மாகாணத்தின் பலமாக இருந்து வந்ததாக வி. ஆர். கருதினார். பெரிதாகவும் முக்கியமானதாகவும் முற்போக்கான கருத்துக்களைக் கொண்டதாகவும் விளங்கிய இம்மாகாணம் இனி உயர் பண்பாடுகளை இழந்து குறுகிய மனப்பான்மை கொண்டதாக மாறிவிடும் என்று அவர் அஞ்சினார். தென்னாட்டினை இப்படித் துண்டாடுவதால், தென்னாட்டில் உள்ள அனைவருமே மதிப்பிழந்து விடுவார்கள்; அந்த அளவுக்கு தேசமே பலவீனமடையும் என்று அவர் கருதினார். இதற்கு அவர் தந்த மாற்று உபாயம்: தக்ஷிணப் பிரதேசம். இந்தப் பெரிய மாநிலம், தெலுங்கு, தமிழ், கன்னடம், மலையாளப் பகுதிகளை இணைத்துக் கொண்டு ஒரே தென்னக மாநிலமாக விளங்கும். இதன் மூலம் தென்னாட்டின் அரசியல் முக்கியத்துவத்தை நிலைநாட்டிக் கொள்ளலாம். ஆனால் வி. ஆரின் இந்த மாற்று யோசனையை யாருமே லட்சியம் செய்யவில்லை. எல்லைத் தகராறுகளும் அதையொட்டிய கலவரங்களும் பல மாநிலங்களை உலுக்கி எடுத்தன. ஹிந்தி ஆட்சி மொழியாகத் திணிக்கப்படுமானால் என்ன நேரும் என்பதற்கு இவை ஒரு முன்னோடி என்று வி. ஆருக்குத் தோன்றியது. 'மத்திய அரசின் ஆட்சி மொழிக் கொள்கையானது இவற்றைவிட மோசமான சண்டை பூசல்களையும், எதிர்காலத்தில் கலவரங்களை விட மோசமான பின்விளைவுகளையும் ஏற்படுத்தலாம்' என்று அவர் சொன்னார்.

**ப**லருக்கு வி. ஆரின் சொற்கள் மிகவும் கடுமையானவையாகத் தோன்றின. பயமுறுத்தப் பார்க்கிறார் என்று கூடப் பலர் எண்ணினார்கள். உதாரணமாக, ராஜேந்திர பிரஸாத் தமது டயரியில், வி. ஆரின் வார்த்தைகள் ஜின்னாவின் அச்சுறுத்தல்களைப் போல் ஒலிப்பதாக எழுதினார். தேவதாஸ்-










— ஆ. நல்லமுத்து.

காந்தியோ வேறு ஒரு விதமாகக் கவலைப் பட்டார். "நீங்கள் என்ன, ஜவாஹர்லால்ஜி யுடனும்மற்றவர்களுடனும்நேரடியாகப்பேசி விவாதிக்கும் வழக்கத்தைக் கைவிட்டுவிட் டீர்களா?" என்று கேட்டார். மேலும் ஹிந்தியை விட ஆங்கிலம் மேல் என்ற ஸி. ஆரின் கருத்து சுதேசிக்குப் பதில் விதேசியை விரும்புவதாகாதா? என்ற ஐயமும் பலரிடம் ஏற்பட்டது.

ஆனால் ஸி. ஆர். இதற்கெல்லாம் பதில் கூறத் தயாராக இருந்தார். தமது வாதங்க ளுக்குத் தமிழ்நாட்டில் மட்டுமின்றி ஹைத ராபாத்திலும் கல்கத்தாவிலும் கூட ஆதர வைத் திரட்டினார். அவருடைய வாதங்க ளுக்கு யாரும் சரியான பதில் கூறவும் முடிய வில்லை. தென்னகத்தில் பலரும் அவரைத் தீவிரமாக ஆதரித்தார்கள். கடைசியில் 1958 தொடக்கத்தில் காங்கிரஸ் கட்சி யும் பிறகு, மத்திய அரசும் ஹிந்தியோடு கூடவே ஆங்கிலமும் தொடர்ந்து ஆட்சி மொழியாக நீடிக்கும் என்று அறிவித்தன. ஆங்கிலத்தோடு ஹிந்தியும் கூடவே பயன் படுத்தப்பட்டு வரும்; முடிவில் ஹிந்தியே ஆட்சி மொழியாகும். ஆட்சிமொழியாக ஹிந்தி அரியாசனம் ஏறும் தேதியை எதிர் காலம் நிர்ணயிக்கும்.

ஸி. ஆருக்கு இந்தத் திட்டம் திருப்தி அளிக்கவில்லை.ஹிந்திபேசாதமக்களுடைய தலை மீது இன்னமும் கத்தி தொங்கிக் கொண்டிருப்பதாகவே அவர் கருதினார். ஹிந்தி, ஆங்கிலம் இரண்டும் ஒரே சமயத் தில் பயன்படுத்தப்பட்டு வரும் என்ற திட்டம் குழப்பத்தை விளைவிக்கும் என்றும் யோசனையின்றி,யாராலும்புரிந்துகொள்ள முடியாத விதத்தில், ஹிந்தியைப் பயன்படுத் துகிற நிலையை அனுமதிக்கும் என்றும் சொன்னார்.

இவ்வாறு அவர் விட்டுக் கொடுக்காமல் பேசிய போதிலும், ஒரு பெரிய வெற்றி கிடைத்திருந்தது என்பதில் சந்தேகமில்லை. அந்த வெற்றியில் ஸி. ஆரின் பங்கு மகத் தானது.

(தொடரும்)

## பாட்டரி இல்லாமல் டார்ச்! மின்சாரம் இல்லாமல் அழைப்பு மணி!



* பாட்டரி இல்லாமல் இயங்கும் டார்ச்

ஆச்சரியம்! பாட்டரியே இல்லாமல் இயங்குகிறது ஒரு டார்ச்! ஜெனரேட்டர் பொருத்தப்பட்டுள்ளது. கைக்கு அடக்கமா கவும் உள்ளது!

அது மட்டுமா?

மின்சாரம் நின்று போனாலும், பயன் படும்படியாய்க் காற்றழுத்தத்தால் இயங்கும் அழைப்பு மணி இதோ!

எங்கே? என்கிறீர்களா?

பம்பாயைச் சேர்ந்த பாலிகா அண்மை யில் சென்னையில் நடத்தின 'இன்ட்ரொ டக்ஷன்ஸ்' கண்காட்சியில் இது போன்ற இன்னும் பல விதவிதக் கருவிகள் அறிமுக மாகின.

குடையை ஒரு கையிலே பிடித்துக் கொண்டு பைகளிலே சாமான்களையும் தூக்க வேண்டாம். இந்தக் குடையைக் குல்லா போலத் தலையில் அணிந்து கொண்டு விடலாம்!

டெஸ்ட் மாட்ச்களை மிக அண்மையில் பார்க்க வசதியாய் பைனாகுலர் இணைத்த மூக்குக் கண்ணாடி!

படுக்கையிலிருந்து ஒரு பொட்டுத் தூசி விடாமல், சுத்தமாய்த் துடைத்து எடுக்க உதவும் புதுமையான பிரஷ்.

சுமார் பதினெட்டுக் கிலோ எடை வரை தாங்கக்கூடிய, சுவரில் பொருத்தக் கூடிய கொக்கிகள்! ஆணி அறைய வேண்டாம்!

அலுமினியம் அல்லது எவர்ஸில்வர் போலவே அடுப்பில் வைத்துச் சமைப்பதற் கேற்ற பிரத்தியேக ரகக் கண்ணாடிப் பாத்தி ரங்கள்!

நான்கு பகுதிகள் கொண்ட நாலுவித ஓசை எழுப்பும் ஊதல்கள்.

இப்படி எத்தனை எத்தனையோ ஐட்டங் கள் கொண்ட ஸ்டால்கள் பார்வையாளர் களை ஆச்சரியப்படுத்தின.

இந்தக் கண்காட்சியை நடத்திய 'பாலிகா' சொன்னது: இந்தியாவின் பல நகரங்களி லும், இது போல நாற்பத்தொன்பது கண் காட்சிகளை நடத்தியிருக்கிறேன். இதிலே இரண்டு விஷயங்கள். வாடிக்கையாளர் கள், தமக்கு உபயோகமாய்ப் புதிதாய் என்ன வந்திருக்கிறது என்று தெரிந்து கொள்ளலாம். அதே சமயம் விற்பனையா ளர்கள், தயாரிப்பாளர்களுடன் பேசி விநியோக உரிமைகளைப் பெற்றுக் கொள்ளலாம்.

— ஜூலி




# மந்திரி பதவி கொடுத்தாலும் தரும்!

மாமா இறந்ததும், காளியை விட, நாங்கள் ஒரு படி மேலே துனுக் குற்றோம் என்றால் அது, மிகை யல்ல! காளியின் மனத்தினை — அவன் முகபாவத்தில் சோகமாய் வடித்திட்ட வேதாவின் நூரி கைக்கு ஒரு சபாஷ்!

சென்னை — 80, ''ஸ்ரீ'' மகுடப் பிரியன்.

• 'மடமையைக் கொளுத்துவோம்' — ஆணித்தரமான எழுத்துக்கள், ஆண்களின் தரத்தைக் கண்டு கொள்ளவும் பெண்களின் பயத்தை விரட்டி அடிக்கவும் பயன்படும், இத் தலைப்பில் வெளிவரும் கட்டுரைகள்.

மேலைச்சிவபுரி, மா. தெய்வ வதா.

• இன்னும் எங்கள் ஊரில் 'கட்டிப் பூனை' படம் ரிலீஸாக வில்லை. ஆனால், அதற்குள் அந்தப் படத்தைப் பார்ப்பதற்கான ஆவலை உண்டாக்கி விட்டது, அந்தப் படத்திற்கு உமது விமரிசகர் எழுதிய அற்புதமான விமரிசனம்.

ஈரோடு, வி. ரெங்கநாதன்.

• ரஜினிகாந்தின் மனம் திறந்த பேட்டியைப் படித்தேன். கல்கியின் கேள்விகளுக்கு அவர் அளித்த பதில்கள் தெளிவாகவும், சிந்தனையைத் தூண்டும் வகையிலும் அமைந்துள்ளன. மாறுபட்ட பேட்டி. சொல்லப் போனால் திரைப்பட நடிகரின் பேட்டி என்று கூறுவதை விட ஆன்மீகவாதியின் பேட்டி என்று கூறுவது இன்னும் பொருத்தம்!

மதுரை, இல. அமுதன்.

• பொங்கல் சிறப்பிதழ் அறுகளையோடு அருமையாக அமைந்துள்ளது. அமைதியாய் சூப்பர் ஸ்டார் ரஜினியை அட்டையில் தாங்கி, அவரின் பேட்டியோடும் தேர்தல் ரவுண்ட்—அப் போடும் வந்த கல்கியைப் படித்த போது அருமையான சர்க்கரைப் பொங்கல் சாப்பிட்ட உணர்வு ஏற்பட்டது.

உச்சிப்புளி, கலைப்பிரியன்.

• 'யாருக்கு வோட்டு? வாக்காளரின் கடமை என்ன?' என்ற தலையங்கம் 'வோட்டுப் போட மாட்டோம்' என்று சொல்பவர்களுக்கும் இருப்போ, முப்பதோ கட்சிக்காரர்கள் கொடுக்கும் தொகையைப் பெற்றுக் கொண்டு, ஐந்தாண்டு கால ஆட்சியை அலட்சியமாகச் சமூக விரோதிகளின் கையில் வோட்டாகக் கொடுப்பவர்களுக்கும் ஒரு சிறந்த படிப்பினை.

திவாகதுருகம், கே. மகேஷ்.

• சரியான நேரத்தில், உயர்ந்த நோக்குடன் எழுதப்பட்டது இவ்வாரத் தலையங்கம். நமது நாட்டில் கூட்டணி ஆட்சியால் என்னென்ன குழப்பங்கள் ஏற்படும் என்பதை விளக்கி அதைத் தவிர்க்க இரு முக்கிய கட்சிகளுக்கு மட்டும் வாக்களித்து எதிர்க் கட்சியாகவோ (அ) ஆளுங்கட்சியாகவோ வர அவற்றிற்கு வாய்ப்பளிக்க வேண்டும் என நேரடியாகக் கூறியதன் மூலம் நமது நாட்டின் முன்னேற்றத்தில் 'கல்கி' எந்த அளவிற்கு அக்கறை கொண்டுள்ளது என்பதை மீண்டும் நிரூபித்து விட்டீர்கள். நான்கு முனைப் போட்டி நடக்கும் இதைப் போன்ற குழப்பமான தேர்தல் சமயத்தில், 'போற்றுவோர் போற்றட்டும்; புழுதி வாரித் தூற்றுவார் தூற்றட்டும்' என்று யாருக்கு வாக்களித்தால் நிலையான ஆட்சி அமையும் என அறிவுரைப்பது ஒவ்வொரு நடுநிலைமைப் பத்திரிகையின் கடமையாகும். இதற்காகச் சில அரசியல் கட்சிகள் கல்கி'யைத் தவறாக நினைத்துக் கொண்டாலும், பத்திரிகை தர்மத்தைக் காப்பாற்றிய உங்களை எங்களைப் போன்ற வாசகர்கள் மற்றும் நிலையான ஆட்சியையே விரும்பும் நல்லவர்கள் பாராட்டவே செய்வர்.

நக்கோலம், ஆ. புகாரி.

• 'கிட்டத்தட்ட ஓராண்டு காலமாக நடைபெறும் கவர்னர் ஆட்சி சாதித்தது என்ன?' என்ற கேள்விக்குக் காங்கிரஸுக்குத் தனியாகப் போட்டியிடும் அளவுக்குத் துணிச்சலை அளித்திருப்பதுதான் என்று நெறப்பான பதில் வழங்கிய தாராக்கு மந்திரி பதவி கொடுத்தாலும் தரும்.

சென்னை — 23, அயன்புரம் சிவாஜிபாபு.

• ''டாட்டா'' என்று சொல்வதற்குப் பதில் ''ஜெய ஜெய சங்கர'' என்று சொல்லும் அந்தக் குழந்தைகளைப் பற்றிப் படித்த பின் எந்த மதத்தவரானாலும் இதுபோன்ற நல் வாசகங்களைக் குழந்தைகளுக்கு (அவரவர் வணங்கும் இறைவர்களின் நாமங்களை)ச் சொல்லிக் கொடுத்தால் இறையுணர்ச்சியுடன் கூடிய நல்ல பழக்கங்கள் குழந்தைகளை எளிதில் வந்தடையும் என்று எண்ண வைத்தது.

சென்னை — 33, வி. எஸ். வாசன்.

• ''ஜெனு'' — ஒரு சிறு கருவை எடுத்துக் கொண்டு, காளிக்கும், மாமாவுக்கும் ஏற்பட்ட அனுபவங்களை அற்புதமாக வெளிப் படுத்தி விட்டார் கதாசிரியர்.

• பாலகுமாரனின் 'எதிர்ப் பக்கம்' குறுநாவல் அருமையிலும் அருமை. ஒரு பெண்ணினால் ஏற்படும் வாழ்க்கை மாற்றத்தை வெகு அழகாக ஆழமாகச் சித்திரித்திருந்தார். இத்தப்பான இக் கதை என் மனத்தில் ஆழப் பதிந்தது. பாராட்டுக்கள்.

மதுரை — 9, பிரபாகர் பிரியன்.

• பாலகுமாரனின் 'எதிர்ப் பக்கம்' குறுநாவல் படித்தேன். வரதனுக்குக் கிடைத்த கணேசன், மணி, கப்புனி, மனோகர், கவி போன்ற ஆதரவான நண்பர்கள் ஒரு மனிதனுக்குக் கிடைத்து விட்டால் அவனை விடப் புண்ணியம் செய்தவர் வேறு யாரும் இருக்க முடியாது. கல்யாணியும் வரதனும் இனிமேல் எந்தச் சண்டை சச்சரவுமின்றி வாழ இங்கிருந்தே என் வாழ்த்து மலர்களைத் தூவுகிறேன்!

கடலூர் — 2, ஆர். வேலுமணி.

• ரயில் பயணத்தின் போது பொங்கல் சிறப்பிதழ்க் கல்கியைக் கையில் எடுத்தேன். என் சீட்டுக்கு 'எதிர்ப் பக்கம்' — யார் யார் இருக்கிறார்கள் என்பது கூடத் தெரியாத அளவுக்குப் பாலகுமாரன் தம் குறுநாவல் மூலம் என்னைக் கட்டிப் போட்டு விட்டார்!

மதுரை, சுகந்தி நாராயண்.

• வையவனின் 'காதல் நோயாளி' — சிறுகதை எங்களுக்குப் பொங்கல் பரிசாக இருந்தது.

சென்னை — 32, ஆற்காடு வி. குமார்.



## சின்னச் சின்னச் செய்திகள்:

# டீவி நாடகத்தில் பிரதமரின் தற்கொலை!

●● டீ.வி.யில் ஒரு கால்பந்துப் பந்தயம் காண்பிக்கப்பட்டு வந்தது. திடீரென்று அது நின்றது. அறிவிப்பாளர் தோன்றி, "பிரதமர் தமது காரியாலயத்தில் இறந்து கிடக்கிறார். அவர் அருகில் ஒரு துப்பாக்கி காணப்படுகிறது. போலீஸ் உயர் அதிகாரி ஒருவர், 'பிரதமர் தற்கொலை செய்து கொண்டு விட்டார் என்பதில் சந்தேகமில்லை' என்றார்" என்று அறிவிப்புச் செய்தார்! இஸ்ரேல் நாடு முழுதும் கலகலத்துப் போய் விட்டது! மக்கள் பலர் கேவி அழ, வேறு பலர் பரபரப்புடன் டீவி நிலையத்துக்கும் போலீஸ் ஸ்டேஷன்களுக்கும் போன் செய்ய, ஒரே அல்லோல கல்லோலம்தான்! விஷயம் என்னவெனில், அந்த நிகழ்ச்சி ஒரு டீவி நாடகத்தின் ஒரு பகுதி! நாடகத்தை எழுதித் தயாரித்தவர்கள், இப்படி மக்கள் ஏமாந்து போய், பதறித் துடிக்கலாம் என்பதற்காகவே முதல் நாளே டீவியில் நாடகம் பற்றிய முன்னோட்டத்தில் இந்தக் காட்சியை விளக்கிக் கூறியிருந்தனர். ஆயினும் முன்னோட்டம் நிகழ்ச்சியைப் பார்க்காத பலர் பரிதவித்துத்தான் போய் விட்டனர்!

●● இதாலியில் ஜெனோவா நகரில் ஒரு விநோதமான கொள்ளைக்காரன் இருக்கிறான். இவன் கொள்ளையடிப்பது பெண்களின் காலணிகளை மட்டுமே. சாலையில் நடந்து கொண்டேயிருக்கும் போது திடீரென்று இவன் ஒரு பெண்ணின் காலடியில் மண்டியிட்டுப் பணிவான். 'ஏன், எதற்கு' என்று அப் பெண்மணி யோசிக்கு முன் அவளுடைய ஒரு காலணியைக் கழற்றிக் கொண்டு ஓடி விடுவான்! இப்படி நூற்றுக் கணக்கான பெண்களின் காலணிகளைக் கொள்ளையடித்துச் சென்ற இந்தத் திருடன் இன்னும் கண்டுபிடிக்கப்படவேயில்லை!

●● கடலூர் அருகே குறிஞ்சிப்பாடி வரதராஜன் பேட்டை கிராமவாசி ஒருவர் காலைக் கடன்களை முடிக்கச் செல்கையில் புதையல் கண்டெடுத்தார்! ஒரு பானை நிறைய 13 தங்க மோதிரங்களும் 170 தங்கக் காசுகளும் கிடைத்தன. இவற்றின் எடை ஒரு கிலோவுக்கும் அதிகம்! பானையை வீட்டுக்குக் கொண்டு போனார். ஆனால் விஷயம் வெளியே பரவி விட, போலீஸார் வந்து புதையலைக் கைப்பற்றிக் கொண்டு போய் விட்டனர்!

●● பென் ஜான்ஸனை நினைவிருக்கிறதா? ஆம், ஒலிம்பிக்ஸிலிருந்து வெளியேற்றப்பட்டவர்தான். தங்கப் பதக்கத்துக்கு ஆசைப்பட்டு மருந்துகளை உட்கொண்டு செயற்கையாகச் சக்தி பெற்ற குற்றத்துக்காகத் தலைகுனிய நேர்ந்தவர்தான். உலகையே அதிர்ச்சி அடைய வைத்த இந்தச் சம்பவத்தையும் தூக்கி அடிக்கக்கூடிய செய்தி ஒன்று இப்போது கிடைத்திருக்கிறது. அதாவது, பிரிட்டிஷ் இளவரசர் சார்லஸுக்குச் சொந்தமான ஒரு ரேஸ் குதிரை முதலாவதாக வந்து, எஜமானனுக்கு 650 பவுண்டு பணம் பெற்றுத் தந்த பிறகு நடந்த ஆய்வில், அது ஊக்க சக்தி மருந்து உட்கொண்டிருப்பதாகக் கண்டறியப்பட்டது! இது குற்றமென்றாலும் இதில் இளவரசர் சார்லஸுக்குச் சம்பந்தம் இல்லை எனவும் குதிரைப் பயிற்சியாளர் செய்த குற்றம் எனவும் கூறப்படுகிறது! என்றாலும் அரச குடும்பத்துக்கே தலைகுனிவுதானே!

●● பிரிட்டன், ஸவுத் ஹாம்ப்டன் நகரில் வசிக்கும் ஸ்விட்ஸர் என்பவர் தான் உலகிலேயே மிக அதிகமாகச் சத்தம் போட்டுக் குறட்டை விடுகிறவர்! இவர் குறட்டை ஒலி, ஓடும் ரயில் போடும் சத்தத்துக்கு இணையானது! ஜப்பானில் நடந்த ஒரு பந்தயத்தில் குறட்டை ஒலிக்கு முதலிடம் பெற்றுத் தங்கப் பதக்கம் வென்ற ஸ்விட்ஸர், அக்கம் பக்கத்தில் யாருக்கும் தொந்தரவு தரக்கூடாதென்பதற்காக நகர எல்லையைத் தாண்டி ஏகாந்தமான இடத்தில் வீடு கட்டி வசிக்கிறார். நல்லவேளை, அவர் மனைவி ஜூலிக்குக் காது கேட்காது; டமாரச் செவிடு!

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளியிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
அறுமாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

# உங்கள் குழந்தைக்கு அளியுங்கள் ஸெரிலாக் அநுகூலம்



## திட உணவின் தொடக்கத்திலிருந்தே

உங்கள் குழந்தைக்கு நான்காம் மாதத்திலிருந்தே பாலோடு திட உணவும் தேவை. அப்போது ஸெரிலாக் அநுகூலம் அளியுங்கள்.

**போஷாக்கு அநுகூலம்:** ஒவ்வொரு முறை ஸெரிலாக் ஊட்டும் போதும், புரதச்சத்து, கார்போஹைட்ரேட், கொழுப்பு, வைட்டமின், மற்றும் தாதுப் பொருட்கள் ஆகிய எல்லா போஷாக்குச் சத்துக்களும் சரியான விகிதத்தில் உங்கள் குழந்தைக்குக் கிடைக்கிறது.

**சுவை அநுகூலம்:** ஸெரிலாக் சுவையில் குழந்தைகளுக்குக் கொள்ளை ஆசை.

**தயாரிப்பதில் அநுகூலம்:** ஸெரிலாக் ஏற்கனவே பதமாக்கப்பட்டது: பாலும் சர்க்கரையும் கலந்தது. காய்ச்சி ஆறிய நீரில் கலந்தாலே போதும்

**தேர்ந்தெடுக்க அநுகூலம்:** இப்போது ஸெரிலாக், மூன்று வெவ்வேறு வகைகளில்!

*சுகாதாரமான முறையில் தயாரிக்கவும், சரியான விகிதத்தில் போஷாக்கு கிடைக்கவும் டின்னில் தரப்பட்டுள்ள குறிப்புகளை தயவு செய்து பின்பற்றுங்கள்.*




6 மாதங்களிலிருந்து




4 மாதங்களிலிருந்து




6 மாதங்களிலிருந்து

இலவசம்
ஸெரிலாக் பேபி கேர் புத்தகம்
எழுதுங்கள்: ஸெரிலாக்,
தபால் பெட்டி எண். 3
புது தில்லி-110008




**ஸெரிலாக் பராமரிப்பு: முழுமையான போஷாக்கு, சிறப்பான சுவை**

RK SWAMY/FSL/5112/TAM

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Sri Lanka

அறிமுகம்

International
Lux

International
Lux
BEAUTY SOAP

LUX

"70 நாடுகளிலே பெரிதும் விரும்பப்படும் மேனியெழில் பராமரிப்பு சோப்புதான் எனக்கும் பெருவிருப்பம்!" ஸ்ரீதேவி



70 நாடுகளிலுள்ள மிக அழகான சினிமா நட்சத்திரங்கள் தேர்ந்தெடுக்கும் ஒரே மேனியெழில் பராமரிப்பு சோப்—இன்ட்டர்நேஷனல் லக்ஸ்.

ஏனெனில், செழுமையான, செறிவான நுரையும், உலகே விரும்பும் நறுமணமும் உள்ளது இன்ட்டர்நேஷனல் லக்ஸ் மட்டுமே.

இப்போது, இந்த சர்வதேச தரமேன்மையுள்ள மேனியெழில் பராமரிப்பு உங்களுக்கும் கிடைக்கிறது. இந்தியாவில்.

International
Lux

உலகெங்கும் சினிமா நட்சத்திரங்களின் அழகு சோப்.

HTA 1953

இந்துஸ்தான் லீவர் லிமிடெடின் தரமிக்க தயாரிப்பு.